ஸ்ரீ

# திராவிடசப்ததத்வம்.

## மரபியல்.

1. தமிழ்ச்சொற்கள் இயற்சொல், திசைச்சொல், வடசொல் என மூவகையாம்.

2. இயற்சொல் செந்தமிழ்நாட்டிலுண்டாய் வழங்குஞ் சொல்.

முற்காலத்தில் "வைகையாற்றின் வடக்கும் மருதயாற்றின்றெற்கும் கருவூரின் கிழக்கும் மருவூரின் மேற்கும் உள்ளநாடு **செந்தமிழ் நாடு**" என்று சொல்லப்பட்டது. இக்காலத்திலோ சென்னபட்டணமுதல் திருநெல்வேலிவரையிலும் கடற்கரையிலுள்ளநாடுகள், கோயம்புத்தூர், சேலம், சிற்றூரின் தென்பாகமும் மேற்பாகமும், செந்தமிழ்நாட்டுள் அடங்கி யிருக்கின்றன.

3. திசைச்சொல் வேறு நாடுகளிலிருந்துவந்து செந்தமிழ்நாட்டில் வழங்குவது.

பழய இலக்கணநூல்களில் திசைச்சொல்லுக்கு அடியில் வருமாறு இலக்கணம் கூறப்பட்டிருக்கிறது:—

செந்தமிழ் நிலத்தைச்சேர்ந்த நாடுகளிலிருந்தும் தமிழ்நாடு ஒழிந்த பதினெட்டு நாடுகளிலிருந்தும் வந்து செந்தமிழ்நாட்டில் வழங்குஞ் சொல் திசைச்சொல்.

கொடுந்தமிழ் நாடுகளாவன:—

"தென்பாண்டி குட்டங் குடங்கற்கா வேண்பூழி
பன்றி யருவா வதன்வடக்கு—நன்றாய
சீத மலாடு புனனாடு செந்தமிழ்சேர்
ஏதமில் பன்னிருநாட் டெண்" [நன். விரு. ப. 243.]

"பன்னிருநிலமாவன:—பொங்கர்நாடு, ஒளிநாடு, தென்பாண்டிநாடு, குட்டநாடு, குடநாடு, பன்றிநாடு, கற்காநாடு, சீதநாடு, பூழிநாடு, மலையமாநாடு, அருவாநாடு, அருவாவடதலை எனச் செந்தமிழ்நாட்டுத் தென்கீழ் முதலாக வடகீழ்பாலிறுதியாக எண்ணிக்கொள்க"—[சேனாவரையர். 251.] இதிற்சொன்ன தென்பாண்டிநா

வடதலை வரையில் உள்ள பத்துநாடுகளும் மேற்காட்டிய செய்யுளி லும் கூறப்பட்டிருக்கின்றன. பொங்கர், ஒளி என்னு மிரண்டு பெயர்க்குப்பதிலாய் வேணாடு புனாடு என்னு மிரண்டுபெயர்கள் வந்திருக்கின்றன. இத்தப்பெயர்களில் வேணாடு என்பது திருவனந்த புரத்தைச்சேர்ந்த தேசமெனத் தெரியவருகின்றது. புனாடு காவிரிநாடு. ஆனால் பொங்கர்நாடு, ஒளிநாடு என்பன இவையெனத் தெரியவரவில்லை. வேறொரு அச்சுப்பிரதிகத்தில் பொங்கர் என்ப தற்குப் பதிலாய் பொதுங்காநாடு என வந்திருக்கின்றது.

பூழிநாடென்பது மதுரைக்கருகிலுள்ள ஓாபட்டணமும் அதனை யடுத்த நாடுமென்பர் சிலர்.

அருவா அருவாவடதலை, சென்னபட்டணவரசாட்சிக்குள்பட்ட வடதேசங்கள் போலும்.

தமிழொழிந்த பதினெட்டு நாடுகளாவன :—

" சிங்களஞ் சோனகஞ் சாவகஞ் சீனந் துழுக்குடகங்
கொங்கணங் கன்னடங் கொல்லந் தெலுங்கங் கலிங்கம் வங்கம்
கங்க மகதங் கடாரங் கவுடங் கடுங்குசலந்
தங்கும் புகழ்த்தமிழ் சூழ்பதி னேழ்புவி தாமிவையே " [நன். விரு. p. 243.]

4. வடசொல் வடமொழியிலிருந்து தமிழில்வந்து வழங் கும் சொல்; இது இருவகைத்து தற்சமம், தற்பவம் என.

5. தற்சமம் வடமொழிக்குந் தமிழிற்கும் பொதுவாகிய எழுத்துக்களாலமைந்து வேறுபாடில்லாது வடமொழியி லிருந்துவந்த பதங்கள்.

| | | | | |
|---|---|---|---|---|
| (உ-ம்.) | காரணம் | சரணம் | பாசகன் | வாரணம் |
| | கர்ணன் | சலநம் | பாபம் | வீரன் |
| | காநநம் | உத்தரம் | பரமன் | வரன் |
| | காசம் | அமரன் | தமாலம் | வசநம் |
| | குசம் | ஆபணம் | தபநன் | விமாநம் |

வடமொழியில் பும்லிங்கவிகுதியாகிய அஸ் என்பதை நீக்கி அத னிடத்தில் தமிழ் ஆண்பால் விகுதியாகிய அன் என்பதை வைப்பது வேறுபாடாகாது. மற்ற பால்காட்டும் விகுதிகள் வரும்பொழுது இவ்வாறே கொள்க.

6. தற்பவம் வடமொழியிலிருந்து வேறுபாட்டுடன் வருஞ்சொல்.

## மரபியல்.

| தற்பவம். | ஸம்ஸ்க்ருதம். |
|---|---|
| தற்பரன் | ... தத்பர: |
| கற்பம் | ... கல்ப: |
| பாவம் | ... பாபம் |
| ஆவணம் | ... ஆபண: |
| ஆதவம் | ... ஆதப: |
| தேயம் | . தேஶ: |
| தயரதன் | . தஶரத: |
| புயம் | ... புஜ: |
| தேயு | ... தேஜஸ் |
| தேய் | ... திக் |
| மாதம் | ... மாஸ: |
| தேதி | ... திதி: |
| தெழி | ... த்ருஷ்டி |
| கலுழ் | ... கலுஷம் |
| அமிழ்து | ... அம்ருதம் |
| கலுழன் | ... கருட: |
| பீழை | ... பீடா |
| சண்பகம் | ... சம்பக: |
| விசாதி | ... வ்யாதி: |
| பாரசி | .. பாரஸீ |
| கடிகை / கடிஞை | } .. கடிகா |
| பகுதி | ... ப்ரக்ருதி: |
| வடிவம் / படிமை | } ... ப்ரதிமா |
| பவளம் | ... ப்ரவாளம் |
| பாகதம் | ... ப்ராக்ருதம் |
| உருப்பசி | ... ஊர்வஶீ |
| பருப்பதம் | ... பர்வத: |
| இலக்குவன் | .. லக்ஷ்மண: |
| வீடுமன் | ... பீஷ்ம: |
| சீதமன் | ... ஶாதவ: |
| நாரணன் | .. நாராயண: |
| விண்டு | ... விஷ்ணு: |
| கண்ணன் | ... க்ருஷ்ண: |
| வண்ணம் | .. வர்ண: |
| சுண்ணம் | ... சூர்ணம் |
| பன்னி | ... பத்நீ |
| கன் | ... கம்ஸ: |
| உகம் | ... யுகம் |
| ஊகம் | .. வ்யூஹ: |
| அந்தி | ... ஸந்த்யா |
| அவை | .. ஸபா |
| அமா | ... ஸோம: |
| அமண் | ... ஶ்ரமண: |
| உவணன் / சுவணன் | } ஸுபர்ண: |
| ஆவணி | .. ஶ்ராவணீ |
| ஏணி | ... ஶ்ரேணி: |
| ஊசி | ... ஸூசீ |
| ஊன் / சூன் | } .. ஸூநா |
| அத்தி | ... ஹஸ்தி |
| மத்து | ... மந்த: |
| வட்டம் | ... வ்ருத்தம் |
| நட்டம் | ... ந்ருத்தம் |
| மட்டு | ... மாத்ரம் |
| வட்டி | ... வ்ருத்தி: |
| அக்கு | ... அக்ஷ: |

| | | | |
|---|---|---|---|
| சங்கு | ... ஶங்க: | *பேம் | ... பயம் |
| அச்சு | ... அக்ஷ: | கைலை | ... கைலாஸ: |
| கச்சு | ... கக்ஷ்ய: | கோதை | ... கோதாவரி |
| சுக்கு | ... ஶுஷ்க: | கைகை | .. கைகேயீ |
| காப்பியம் | ... காவ்யம் | பெண்ணை | ... பிநாகிநீ |
| கட்டியம் | . கத்யம் | ஆணை | ... ஆஜ்ஞா |
| நிச்சம் | .. நித்யம் | இராணி | .. ராஜ்ஞீ |
| விச்சாதரர் } விஞ்சையர் } | ... வித்யாதரா: | விண்ணப்பம் | ... விஜ்ஞாபநம் |
| உஞ்சை | ... உஜ்ஜயிநீ | மென்மை | ... ம்ருதிமா |
| அமைச்சர் | ... அமாத்ய: | கருமை | ... கரிமா |
| கச்சோதம் | .. கத்யோத: | திண்மை | .. த்ருடிமா |
| பரிசம் | ... ஸ்பர்ஶ: | வன்மை | ... பலிமா |
| கந்து | .. ஸ்கந்த: | வெண்மை | .. தவலிமா |
| நானம் | ... ஸ்நாநம் | பசுமை | .. பீதிமா |
| நேசம் | ... ஸ்நேஹ: | கருமை - 'கறுப்பு' | ... காலிமா |
| மிருதி | ... ஸ்ம்ருதி: | ,, - 'பெருமை' | ... கரிமா |
| தோம் | ... தோஷ: | தண்மை | ... ஜடிமா |
| தேம் | .. தேஶ: | அத்தி | .. அஸ்தி |
| நாம் | ... நாமந் | ஆலத்தி | ... ஆவ்ருத்தி: |
| | | உத்தி | ... யுக்தி: |
| | | சத்தி | ... ஶக்தி: |

7. **உயிர்** தானே உச்சரிக்கப்படும் எழுத்து.

8. **மெய்** உயிரெழுத்தின் உதவியாலுச்சரிக்கப்படும் எழுத்து.

9. **வல்லெழுத்து** வன்மையுடன் உச்சரிக்கப்படும் எழுத்து.

10. **மெல்லெழுத்து** மென்மையுடன் உச்சரிக்கப்படும் எழுத்து.

11. **இடையெழுத்து** மிக்க வன்மையும் மிக்க மென்மையுமின்றி உச்சரிக்கப்படும் எழுத்து.

---

* இச்சொல் மஹாராஷ்டிர பாஷையிலும் இப்பொருளில் வழங்கி வருகின்றது.

12. **ஆய்தம்** மூன்றுபுள்ளி வடிவினதாய் வடமொழியி லுள்ள ஹகாரத்தைப்போலுச்சரிக்கப்படும் எழுத்து. ஆயுதம் - படை; வரிவடிவில் படையைப்போலிருப்பத ஞல் அதற்கு ஆயுதமென்று பெயர் வந்தது. ஆயுதம் ஆய் தமென மருவியது.

13. **மாத்திரை** ஓரிமைப்பொழுதி லுச்சரிக்கப்படும் எழு த்தின் அளவு.

14. **குறில்** ஒரு மாத்திரையுள்ள எழுத்து; அதற்குக் குற்றெழுத்து எனவும் பெயர்.

15. **நெடில்** இரண்டு மாத்திரையுள்ள எழுத்து; அதற் கு நெட்டெழுத்து எனவும் பெயர்.

16. **அளபெடை** மூன்றுமாத்திரையுள்ள எழுத்து.

17. **பகுபதம்** பலவுறுப்புக்களடங்கிய சொல்.

18. **பகாப்பதம்** ஒரேயுறுப்புள்ள சொல்.

19. **பகுதி** சொல்லின் முதனிலை.

20. **விகுதி** சொல்லின் ஈற்றுறுப்பு.

21. **இடைநிலை** வினைச்சொற்களில் பகுதிக்கும் விகுதிக் கும் இடையில் காலங்காட்டிநிற்கும் உறுப்பு.

22. **சாரியை*** பகுபதவுறுப்புக்களுக்கிடையில் வரும் எழுத்து அல்லது அசை.

23. **அசைநிறைவிகுதி** சொற்களுக்கு ஈற்றிலே பொரு ளில்லாது வரும் எழுத்து அல்லது அசை.

(உ-ம்.) **முன்னே**—முன், ஏகாரம் பொருளில்லாது ஈற்றிலேவந்தது.
**உள்ளே**—உள், ,, ,, ,,
**மேலே**—மேல், ,, ,, ,,
**கீழே**—கீழ், ,, ,, ,,

---

* "சாரியை என்றதன்பொருள் வேறுநின்ற இருமொழியும் தம் மிற் சாதற்பொருட்டு இயைந்துநின்றது என்றவாறு" என்று **நச்சி னார்க்கினியர்** [தொல்-எழு-சூக்-118.]

**மேன**—மேன், மேல் என்பதன் ஈற்று லகரம் னகரமாய்த் திரிந்தது, அகரம் ஈற்றில் வந்தது. "பால்பிரிந்திசையா வுயர்திணைமேன" [தொல்-சொல்-சூ-57.]

**கிளவியான**—கிளவியான், ஆன் என்னும் மூன்றாம்வேற்றுமையுருபின் ஈற்றில் அகரம் வந்தது. "செப்பேவழீஇயினும்வரைநிலையின்றே, அப்பொருள்புணர்ந்த கிளவியான" [தொல்-சொல்-சூ-15.]

**தெரியுமோர்க்கே**—தெரிந்தோர்க்கு, கு என்னும் நான்காம் வேற்றுமையுருபின் ஈற்றில் ஏகாரம் வந்தது. "திரிபிடனிலவே தெரியுமோர்க்கே" [தொல்-சொல்-சூ-101.]

**ஆசிரியர்க்க**—ஆசிரியர்க்கு, குவ்வுருபினீற்றில் அகரம் வந்தது. "கடிநிலையின்றேயாசிரியர்க்க" [தொல்-சொல்-சூ-108.]

**பெயர்க்குந்து**—பெயர்க்கும்; பெயர்க்கும் என்னும் பெயரெச்சத்தினீற்றில் உவ்விகுதிவர, மகரம் நகரமாய்த்திரிய, நகரத்திற்கும் உகரத்திற்கும் இடையில் தகரந் தோன்றியது.

24. குற்றெழுத்தொடு கரம என்பதும் காரம் என்பதும், நெட்டெழுத்தோடு காரம் என்பதும் சேர்ந்து அவ்வவ்வெழுத்துக்களுக்குப் பெயராம்.

(உ-ம்.) ககரம், ககாரம், சகரம், சகாரம், அகரம், அகாரம், உகரம், உகாரம்.

25. விகாரம் இருக்கும் நிலைமாறுதல். அது மூவகைப்படும்; தோன்றல், திரிதல், கெடுதல் என.

26. தோன்றல் இல்லாதது உண்டாதல்; இதனை வடமொழியில் ஆகமம் என்பர்

27. திரிதல் ஒன்று வேறொன்றாய் மாறுதல்; இதனை வடமொழியில் ஆதேசம் என்பர்.

28. கெடுதல் உள்ளது அழிந்துபோதல்; இதனை வடமொழியில் லோபம் என்பர்.

29. கண்டியம் கழுத்தில் பிறக்கும் எழுத்து.

30. தாலவியம் தாலுவில் பிறக்கும் எழுத்து; தாலு - 'ண்ணத்தின் அடியின் இருபக்கம்.

**31. மூர்த்தநியம்** அண்ணத்தின் மேற்புறத்தில் பிறக்கும் எழுத்து; மூர்த்தம் - அண்ணத்தின் மேற்புறம்.

**32. தந்தியம்** பற்களில்பிறக்கும் எழுத்து.

**33. ஓட்டியம்** இதழில் பிறக்கும் எழுத்து.

கண்டியமுதலிய மேற்குறித்த பெயர்கள் வடமொழியிலிருந்து எடுத்து இங்காளப்பட்டன. அவற்றின் பிரயோஜநம் புணரியலில் நன்ருய்த் தெரியவரும். ஆயினும் அடியில்வரும் உதாரணங்களால் அந்தப் பிரயோஜந மித்தன்மைத்தெனச் சிறிது விளங்கும்.

(1) ரகரமொழிந்த மூர்த்தநியங்களோடுகூடிய தந்தியங்கள் மூர்த்தநியங்களாமென்று புணரியலில் ஒருவிதி எழுதப்பட்டிருக்கின்றது.

மூர்த்தநியங்கள் **ட, ண, ள, ழ, ற, ர.**

தந்தியங்கள் **த, ந, ல, ன.**

கொள் + தல் = கொட் + தல் = கொட்டல் = கோடல்.

மேறகண்ட உறுப்புச்சந்தியில் **கோள்** என்னும் பகுதி நிலையுறுப்பு. **தல்** என்பது வருமுறுப்பு.

(2) வல்லினத்தின்பின் **ல, ள, ன** க்கள் வல்லினமாய்த் திரியுமென்னும் விதியால் **தல்** விகுதியின்பின் **ள**கரம் **ட**கரமாய்த் திரிந்தது. திரியவே **கோட் + தல்** எனநின்றது. **கோட்** என்னு முறுப்பின் ஈற்றிலிருக்கும் மூர்த்தநியமாகிய **ட**கரத்தோடு **தல்** என்னு முறுப்பின் முதலிலிருக்கும் தந்தியமாகிய **த**கரம்புணரத் **த**கரம் மூர்த்தநியமாய்த் திரிந்தது. **ந**கரத்திற்கு இனமாகிய மூர்த்தநியம் **ட**கரமாதலால் **த**கரம் **ட**கரமாய்ததிரிந்தது, திரியவே **கோட்+டல்** என நின்றது.

(3) சிலவிடங்களில் மூர்த்தநியத்தின் பின் மூர்த்தநியம் வந்தால் பின்னின்ற மூர்த்தநியங்கெட கெட்ட மூர்த்தநியத்தின் பின்னின்ற குறில் நீளும்; பின்னின்றது நெடிலாயிருந்தால் நெடிலாகவே யிருக்கும் என்னும் விதியின்படி **கோட்+டல்** என்பது **கோ+டல்** என நின்று **கோடல்** என்று ஆகும்.

அப்படியே, **வாழ் + நாள்** என்னுஞ் சந்தியில் நிலையுறுப்பின் ஈற்று **ழ**கரம் **ந**கரத்தின்பின் மெல்லினமாய்த் திரிய **வாண் + நாள்** என நின்றது. மூர்த்தநியமாகிய **ண**கரத்தின்முன் தந்தியமாகிய **ந**கரம் தனக்கினமாகிய **ண**கரமாய்த்திரிய, **வாண் + ணாள்** என நின்றது. மேற்கூறிய (3) விதியின்படி நிலையுறுப்பி னீற்று **ண**கரம் வருமுறுப் பினீற்று **ண**கரம் ஆகிய இரண்டில் பின்னின்ற **ண**கரம்கெட அதன் பின்னின்ற உயிர்க்கு நீட்டம் வரவேண்டும்; ஆயினும் இயற்கையில் நீண்ட உயிர்க்கு விதியினல்வரும் நீட்டம் அவசியமன்று.

## வினையியல்.

34. வினையின் உறுப்புக்கள் பகுதி, விகுதி, இடைநிலை, சாரியை, எதிர்மறையுருபு என ஐந்து. பகுதி, விகுதி, இடைநிலை, சாரியை இவை உடன்பாட்டு வினையில்வரும். எதிர்மறைவினையில் எதிர்மறையுருபும் வரும்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| நட | வீடு | நொ | பொருந் | பார் | கேள் |
| வா | கூ | போ | திரும் | செல் | அஃகு |
| மடி | வே | உரிஞ் | தின் | வவ் | |
| சீ | வை | உண் | தேய் | வாழ் | |

இவ்வாறு முன்னிலை யேவலொருமையில்வரும் வினைகள் ஒருறுப்புள்ளன.

வாரும் = வா + உம் } முன்னிலை யேவற்பன்மை.
தாரும் = தா + உம் } ரகரம் உடம்படுமெய்.

உளன் = உள் + அன்.

உளர் = உள் + அர்.

செய்யாய் = செய் + ஆய், முன்னிலை யேவலொருமை.

இவை பகுதி விகுதி என்னும் இரண்டுறுப்புள்ளன

வந்தும் = வா + த் + உம், தகரம் இறந்தகால இடைநிலை, உம் - தன்மைப்பன்மைவிகுதி.

உண்டனன் = உண் + த் + அனன், இதில் அனன் என்னும் ஸர்வநாமம் விகுதியாய்வந்தது.

இவை பகுதி, விகுதி, இடைநிலை என்னும் மூன்றுறுப்புள்ளன.

வருகிறான் = வா + உ + கிறு + ஆன் } உகரஞ்சாரியை.
தருகிறான் = தா + உ + கிறு + ஆன் }

இவை பகுதி விகுதி, இடைநிலை, சாரியையென்னும் நான்குறுப்புள்ளன.

செய்யாதான் = செய் + ஆ + த்+ஆன், ஆ - எதிர்மறை விகுதி, த் - இடைநிலை.

வாராதவன் = வா+ஆ+த்+அவன், ரகரம் உடம்படுமெய்.

இவற்றில் நான்குறுப்புக்கள் வந்தன.

### பகுதி.

35. செய்தான், செய்கிறான், செய்து, செய்தல் என்று விகுதி முதலியவற்றால் வேறுபட்ட பலவினைகளுக்கும் ...துவாகிய உறுப்பிற்குப் பகுதி என்றுபெயர். அதனோடு

இடைநிலை, விகுதிமுதலிய உறுப்புக்களைச் சேர்ப்பதனால் பல வினைகள் உண்டாகின்றன.

35. வினைப்பகுதிகள் **இயற்கைப்பகுதிகள், செயற்கைப் பகுதிகள்** என இருவகைப்படும்.

36. **இயற்கைப்பகுதிகள்** தொழிலையேயுணர்த்திப் பகாப் பதமாய்நிற்கு' முதனிலைகள். மற்ற முதனிலைகள் **செயற் கைப்பகுதிகள்.**

37. **செயற்கைப்பகுதிகள், பெயரடிப்பகுதிகள், இடைய்டிப் பகுதிகள், உரியடிப்பகுதிகள், வினையடிப்பகுதிகள், வடமொ ழிப்பகுதிகள், தொடர்மொழிப்பகுதிகள்** என அறுவகைப்ப டும்.

பெயரடியாய்வந்த முதனிலைகள் **பெயரடிப்பகுதிகள்.**

இடையடியாய்வந்த முதனிலைகள் **இடையடிப்பகுதிகள்.**

உரியடியாய்வந்த முதனிலைகள் **உரியடிப்பகுதிகள்.**

வினைப்பகுதியடியாய் வந்த முதனிலைகள் **வினையடிப் பகுதிகள்.** இவை, நட, வா முதலிய வினைப்பகுதிகளுக்கு து, வி முதலிய விகுதிகளைச் சேர்த்தலாலுண்டாகிய நடத் து, வருவி முதலியனவும், புல், எள் முதலியவற்றிற்கும் அடை, மடி முதலியவற்றிற்கும் முறையே கு, அங்கு முத லிய விகுதியைச்சேர்த்தலாலுண்டாகிய புல்கு, எள்கு, அடங்கு, மடங்கு முதலியனவும் ஆம்.

வடமொழியடியாய்ப்பிறந்த முதனிலைகள் **வடமொழி ப்பகுதிகள்.**

பலவினைச்சொற்களும், பெயர்ச்சொற்களும், மற்றைச் சொற்களும் தொடர்ந்துவரும் முதனிலைகள் **தொடர்மொழி ப்பகுதிகள்.**

உதாரணங்கள்.

| | | | | |
|---|---|---|---|---|
| வா | நில் | வாழ் | கோ | உண் |
| போ | சொல் | தீ | வை | விள் |
| கூ | கல் | தேர் | தின் | தள் |

இவை இயற்கைப்பகுதிகள்.

அடியில்வருவன செயற்கைப்பகுதிகள்.

இவ்வுதாரணங்களில் பெயரடிப்பகுதிகள், இடையடிப்பகுதிகள், உரியடிப்பகுதிகள் இவற்றையெல்லாம் ஈற்றுறுப்பாகிய விகுதிகளைப் பற்றி, குவ்வீறு, டுவ்வீறு, துவ்வீறு, புவ்வீறு, மூவ்வீறு, வுவ்வீறு, றுவ்வீறு என வகுத்திருக்கின்றபடியால் அவற்றின் முதலுறுப்பாகிய பகுதிகளைப் பிரித்தறியவேண்டும்.

| | | |
|---|---|---|
| உள்கு | ... | உள், (இடப்பெயர்.) |
| நல்கு | ... | நல் (உரிச்சொல்) ; இந்த உரிச்சொல் குவ்விகுதிபெற்று முதலில் 'நல்ல வனுயிரு' என்று பொருள்பட்டுப் பின்பு 'கொடு' என்னும் பொருள் கொண்டது. |
| புல்கு | ... | புல் - 'கூடு' |
| எள்கு | ... | எள் - 'இகழ்' |
| துட்கு - 'அஞ்சு' | ... | துள் - 'குதி' |
| மட்கு - 'அழுக்காதல்' | ... | மண் |
| மாழ்கு | ... | மாழ் |
| மெல்கு - 'மெலிதல்' | ... | மெல் (உரிச்சொல்.) |
| அடங்கு | ... | அடை |
| மடங்கு | ... | மடி |
| கலங்கு | ... | கல |
| முழங்கு | ... | முறை, றகரம் ழகரமாய்த்திரிந்தது. |
| இறங்கு<br>இரங்கு | ... | இழி, ழகரம் றகர ரகரங்களாய்த் திரிந்தது. கீழ் என்னு மிடைச் சொல்லடியாய் கிழி என்னும் பகுதியுண்டாயிற்று. அதற்கு 'கீழ் செல்லல்' என்பது பொருள். ககரந்தொக்கு கிழி இழி ஆயிற்று. கிழி என்பது 'இறங்குதல்' என்னும் பொருளில் மலயாளபாஷையில் வழங்குகின்றது. |
| சுருங்கு | ... | குறு |
| நுணங்கு | ... | நுண் (உரிச்சொல்.) |
| பிணங்கு | ... | பிணை |
| வணங்கு | ... | வளை, ளகரம் ணகரமாய்த்திரிந்தது. |
| ஒருங்கு | ... | ஒரு, (எண்ணுரிச்சொல்.) |

இவற்றின் ஈற்றில் குவ்விகுதி வந்தது.

இவற்றில் உள்கு முதலிய பகுதிகளில் துவ்விகுதி சேர்க்கப்பட்டிருக்கின்றது. அடங்கு, மடங்கு, முழங்கு, இறங்கு, இரங்கு, பிணங்கு, வணங்கு என்பவற்றில் துவ்விகுதிக்குப்பின் பகுதியீற்றுயிர் அகரமாய்த் திரிந்திருக்கின்றது. நுணங்கு என்பதில் பகுதியீற்றில் விகுதிக்குப்பின் அகரச்சாரியை வந்திருக்கின்றது.

அண்டு ... அண், (உரிச்சொல்.)

கிண்டு ... கீள், துவ்விகுதி சேரப் பகுதியீற்று ளகரம் ணகரமாயும் விகுதித் தகரம் டகரமாயும் திரிந்தன.

தண்டு - 'சேர்' ... தள் - 'ஒருபக்கம் ஒதுக்கு'
மண்டு - 'நெருங்கு' .. மலி - 'நிறை', 'பெருகு'
தோண்டு ... தோள்
வேண்டு ... வேள்
(ஞெண்டு என்ப இதுப்போல்.)

இவற்றின் ஈற்றில் டுவ்விகுதி வந்தது. இந்த விகுதி துவ்விகுதியின் திரிபு.

திருந்து .. திரு, ஸ௦. ஸ்ரீ: துவ்விகுதியின்பின் மெல்லினம் தோன்றியது.

கந்து - 'கெடு' ... ஸ௦. கந் - 'பிரகாசித்தல்'

முந்து ... முன்
பிந்து　பின்

அழுந்து ... ஆழ், துகரவிகுதியின்பின் மெல்லினந் தோன்றியது.

பொருந்து .. பொரு, ஷை
உந்து ... உன்,

இவற்றின் ஈற்றில் துவ்விகுதி வந்தது.

திரும்பு ... திரி, புகரவிகுதியின்பின் மெல்லினந் தோன்றியது.

நிரம்பு ... நிறை　ஷை
குழம்பு ... குழை　ஷை
அலம்பு ... அலை　ஷை
கிளம்பு ... கிள - 'எழு'　ஷை
எழும்பு ... எழு　ஷை
விளம்பு ... .. விளி　ஷை

இவற்றின் ஈற்றில் புவ்விகுதி வந்தது. திரும்பு, நிரம்பு, குழம்பு, அலம்பு, விளம்பு இவற்றில் விகுதிக்குப்பின் பகுதியீற்றுயிர் திரிந்தது.

பொருமு } - 'வீங்கு' ... பெரு
பெருமு

கெழுமு ... கெழு - 'பொருந்து'

குழுமு - 'கூடு' ... குழு - 'கூட்டம்'

கம்மு ... கர - 'மூடு'

விம்மு { 'வீங்கு' 'பெருகு' } .. விரி - 'பரவு'

திருமு .. திரி

அண்மு - 'நெருங்கு' . அண்

இவற்றின் ஈற்றில் மூவ்விகுதி வந்தது. கம்மு, விம்மு என்பவற்றில் விகுதிக்குப்பின் பகுதியீற்று ரகரவுயிர்மெய் தொக்கது. விகுதி மகரம் இரட்டித்தது.

பரவு ... பர

கழுவு .. கழி

பொருவு .. புரை - 'ஒத்திரு'.

தடவு ... தொடு

துவ்வு ... துய் - 'உண்'

இவற்றின் ஈற்றில் வுவ்விகுதி வந்தது. பொருவு கழுவு என்பவற்றில் பகுதியிலுள்ள ஐகாரமும் இகரமும் உகரமாய்த் திரிந்தன, தடவு என்பதில் பகுதியின் ஒகரமும் உகரமும் அகரமாயத் திரிந்தன. துவ்வில் பகுதியீற்றுமெய்கெட விகுதி வகரம் இரட்டித்திருக்கின்றது.

துன்று .. துன் - 'நெருங்கு'

பொன்று { 'அழி' 'குறை' } ... புல் - 'அற்பம்'

ஊன்று - 'சார்' உன் - 'அழுத்து'

துவன்று ... துவல் - 'நிறை'

முரற்று ... முரல் - 'ஒலி'

அரற்று ... அரல் - 'ஒலி'

குயிற்று ... குயில் - 'செய்'

இவற்றின் ஈற்றில் றுவ்விகுதி வந்தது. இந்த றுவ்விகுதி துவ்விகுதியின் திரிபுபோலும்.

இப்பகுதிகளின் ஈற்றில் கு, டு, து, பு, மு, வு, று, இவை விகுதிகளாய் வந்திருக்கின்றன. அவற்றால் பகுதிகளின்பொருள் பெரும்பாலும் வேறுபடாதிருக்கும்.

---

* பொறுக்கு, பெறுக்கு காண்க.

வருவி = வா+உ+வி, பகுதிக்கும் விதிக்கும் இடையில் உகரச்சாரியைவர உகரத்திற்கும் பகுதியீற்று ஆகாரத்திற்கும் இடையில் ரகரவுடம்படுமெய் தோன்றியிருக்கின்றது.

செய்வி = செய் + வி

கற்பி = கல் + பி

சேர்ப்பி = சேர் + பி

நடத்து = நட + து

செலுத்து = செல் + து, உகரம் சாரியை.

நிறுத்து = நில் + து, பகுதியீற்று லகரத்தின் இடத்தில் றகரம் வந்தது.

கொடு = கொள் + து, 'கொள்ளும்படிச்செய்.' ளகர தகரங்கள் இருடகரமாய்த்திரிய, பின்னின்ற டகரங்கெட்டது.

கடாவு = கட + வு; கட - 'செல்'; கடாவு - 'செல்லும் படிச்செய்.'

*பாய்ச்சு = பாய் + து, துவ்விகுதியின் தகரம் சகரமாய்த் திரிந்தது.

சுட்டு = சூழ் + து, தகரமும் ழகரமும் இரு டகரங்களாய்த்திரிந்தன. பகுதியின உயிர் குறுகியது.

இவை தன்வினைப் பகுதிகளுக்கு வி, பி முதலிய விகுதிகளைச்சேர்த்ததனாலுண்டாகிய பிறவினைப்பகுதிகள்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| தழை | . | தழை, | பூ | .. | பூ |
| துளிர் | .. | துளிர | இருள் | .. | இருள் |
| காய் | ... | காய் | எதிர் | .. | எதிர் |
| முளை | .. | முளை | குழி | ... | குழி |
| விதை | ... | விதை | | | |

இப்பகுதிகள் விகுதி யீற்றிலில்லாமல் பெயரடியாய்ப் பிறந்தன.

கொந்தளி = கொந்தல் + இ, கொந்தல் - 'கோபித்தல்'; கொந்து + அல்.

மறுதளி = மறுத்தல் + இ, மறுத்தல் = மறு + தல்.

தெருள் = தெருள் - 'அறிவு,' தெரி - 'அறிதல்.'

சுழல் = சூழல், சூழ் + அல், சூழ் - 'சுற்றல்.'

---

* கும்பகோணத்தினருகில் கிடைத்த ஓா தாமிரசாஸநத்தில் 'நீர் பாய்த்தப்பெறுவாராக' எனப் பாய் என்னும் பகுதிக்கு து என்னும் விகுதி பிறவினையில் வந்திருக்கின்றது.

சுருள் = குறுகல், குறுகு+அல், ககரஞ் சகரமாய்த் திரிந்தது.
கனல் = காந்தல், காந்து + அல், காந்து - 'முதிரவேதல்.'
இப்பகுதிகள் தொழிற்பெயரடியாகப் பிறந்தன.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| கறு | ... | கறுப்பு | பரு | ... | பருமை |
| வெளு | ... | வெளுப்பு | பெரு | ... | பெருமை |
| புளி | ... | புளிப்பு | மெலி | ... | மென்மை |
| தித்தி | ... | தித்திப்பு | திணி | ... | திண்மை |
| கை | ... | கைப்பு | கடு | ... | கடுமை |
| உவர் | ... | உவர்ப்பு | இனி | ... | இனிமை |
| சிறு | ... | சிறுமை | | | |

இவை பண்படியாகப் பிறந்தன.

6. வடமொழிப்பகுதி தற்சமம் என்றும் தற்பவம் என்றும் இருவகைப்படும். தற்சமப்பகுதிகள் வடமொழியிலிருந்து விகாரமின்றி வந்தவை; விகாரப்பட்டுவந்தவை தற்பவப்பகுதிகள்.

(உ - ம்.)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| கல | ... | 𑌕𑌲𑍍 (எண்ணு, கூடு) | தகி | ... | 𑌦𑌹𑍍 |
| சரி | ... | 𑌚𑌰𑍍 | செயி | ... | ஜி |
| சலி | ... | 𑌚𑌲𑍍 | சுகி | .. | 𑌸𑍁𑌖𑍍 |
| வரி | ... | 𑌵𑍃 | தரி | ... | 𑌧𑍃 |
| பூரி | ... | 𑌪𑍃 | வாசி | ... | 𑌵𑌾𑌚𑍍 |
| அநுஸரி | ... | 𑌅𑌨𑍁𑌸𑍃 | சகி | ... | 𑌸𑌹𑍍 |
| பாலி | ... | 𑌪𑌾𑌲𑍍 | வகி | ... | 𑌵𑌹𑍍 |
| | | | கிருசி | .. | 𑌕𑍃𑌶𑍍 |
| இவை தற்சமப்பகுதி. | | | போதி | ... | 𑌬𑍋𑌧𑍍 |
| போஷி | ... | 𑌪𑍋𑌷𑍍 | கோஷி | ... | 𑌘𑍋𑌷𑍍 |
| க்ஷமி | ... | 𑌕𑍍𑌷𑌮𑍍 | பற | ... | 𑌪𑌤𑍍 |
| சயனி | ... | 𑌶𑌯𑌨𑌮𑍍 | தெழி | ... | 𑌧𑍃𑌷𑍍 |
| பாகி | ... | 𑌭𑌾𑌗𑌃 | பிழி | .. | 𑌪𑌿𑌷𑍍 |
| சிருட்டி | ... | 𑌸𑍃𑌷𑍍𑌟𑌿𑌃 | பொழி | ... | 𑌵𑍃𑌷𑍍 |
| தியானி | ... | 𑌧𑍍𑌯𑌾𑌨𑌮𑍍 | விழி | ..., | 𑌶𑌿𑌷𑍍 |
| கவனி | .. | 𑌗𑌮𑌨𑌮𑍍 | விடி | ... | 𑌵𑌿𑌷𑍍 |
| துதி | ... | 𑌸𑍍𑌤𑍁𑌤𑌿 | கட்டு | ... | 𑌗𑍍𑌰𑌨𑍍𑌥𑍍 |

| | | | |
|---|---|---|---|
| சுடு | ... ஶோஷ் | தள் | ... தல் |
| ஓது | ... வத் | மிகு | ... [illegible] |
| பகு, வகு | ... பஜ் | விளங்கு, இலங்கு, பிறங்கு | ... ப்ராஜ் |
| தேய் | ... க்ஷி | தேறு | .. தீர் |
| செப்பு | ... ஜல்ப் | பாடு, படி | ... பட் |
| களை | .. [illegible] | குத்து | ... குட்ட் |
| செல் | ... சல் | சால் | ... ஶால் |
| சார் | .. ஶ்ரி | | |

இவை வடசொல்லடியாய் வந்தன.

கொணு = கொண்டு + வா, பகுதியீற்றிலுள்ள துவ்விகுதியும் வா என்னும் பகுதியின் வகரமும் தொக்கன.

எழுதா = எழுந்து + தா, வினையெச்ச விகுதியாகிய துகரமும் அதன்பின்னின்ற மெல்லினமும் தொக்கன.

செய்துகொள் = செய்து + கொள்
செய்திரு = செய்து + இரு
வந்திடு = வந்து + இடு

இத்தொடர்மொழிப்பகுதிகளிலொவ்வொன்றிலும் ஒரு பகுதியடியாய்ப் பிறந்த இறந்தகால வினையெச்சத்தோடு வேறு பகுதிகள் சேர்ந்திருக்கின்றன.

மல்லா, மல்கா = மேல் + கா { மல்கா ; 'மேல்காத்துக் கொள்ளல்' என்றால் 'முகம் மேலாயிருத்தல்'.

செம்மா* = செம்மம் + கா ; செம்மம் - க்ஷேமம் என்னும் வடமொழிச் சிதைவு, க்ஷேமம் என்பது பொருள்.

ஏமா = ஏமம் + கா, ஏமம் - வடமொழி க்ஷேமம்.
அண்ணு = அண்ணம் + கா.
இறுமா = இருமை + கா.
பொச்சா = பொச்சம் + கா.

---

* "அல்லாப்பர், செம்மாப்பர் என்பனபோல் சோகாப்ப ரென்பதோர் சொல்"—குறள் 13 - 7, பரிமேலழகர்.

சோகா = சோகம் + கா } 15-ம். ப. செம்ஞா என்ப
அல்லா = அல்லல் + கா. } தனைப்பார்க்க.

காத்தலென்னும் பொருளுடைய கா என்னும் பகுதி பின்வந்த பெயர்களோடு சேர்ந்து விகாரப்பட்டுவந்தது.

## வி கு தி.

7. பகுபதங்களின் ஈற்றுறுப்பு விகுதியெனப்படும்.

பால்காட்டும் விகுதிகள்,

### (1) ஆண்பால் விகுதி.

அன் ... இராமன் கொற்றன்
கிருஷ்ணன் பிறன்
சாத்தன் உளன்

தாரினன், இன் ஆறும்வேற்றுமையுருபு உடைமைப் பொருளைக் காட்டுகின்றது. தாரினன் - 'மாலையையுடையவன்'.

அவன் ... அ என்னும் சுட்டிடைச்சொல்லோடு அன்விகுதிசேர அவன் என்னும் ஸர்வநாமம் வந்தது. அதுவே விகுதியாயும் வருகின்றது. அனன் விகுதியைப் பார்க்க.

வந்தவன் கரியவன்
வருபவன் சிறியவன்
வருகின்றவன் வல்லவன்

வன் ... அவன் விகுதியில் அகரந் தொக்கது.
சிறுவன் இளைவன்
இவன் * எவன் *

மன் ... வடமன் = வட + வன், வன் விகுதி வகரம் மகரமாய்த் திரிந்தது.
சிறுமன் = சிறுவன்; இதற்குப்பெண்பால் சிறுமி.

கன் ... வன் விகுதியின் வகரம் ககரமாயிற்று.
சிறுக்கன் = சிறு + வன்

---

* இவன் எவன் என்பவற்றில் அன்விகுதி வர, இயன் எயன் எனநின்று போலிமுறையால் இவன் எவன் எனத் திரிந்ததென்றாலும் அமையும். இங்கு போலி முறை என்பது அவன் என்பதனைப்போல் இயன் எயன் என்பன இவன் எவன் எனத் திரிவதே. ஸர்வநாமப் பிரகரணம் பார்க்க.

கொண்கன் = கொண்டவன், வகரங் ககரமாய்த் திரிந்து டகர வுயிர்மெய் தொக்கது.

அல் ... அன் விகுதியின் ஈற்று னகரம் லகரமாய்த் திரிந்தது.
அண்ணல் = அண்ணன்
சேரல் = சேரன்
இளவல் = இளவன்

மான் ... பெருமான் = பெருவன், வகரம் மகரமாயிற்று, அகரம் நீண்டது.
கோமான் = கோ + வன், கோ - 'அரசன்,' வன் - விகுதி.

மாள் .. பெருமாள்=பெரு+வன், பெருமாள்-'அசரன்' 'குரு' 'சிவன்' 'திருமால்.' மான் விகுதியின் னகரம் ளகரமாய்த் திரிந்தது.

ஆன் ... அவன் விகுதி ஆன் ஆயிற்று.

| | |
|---|---|
| ஆகினான் | தாரினான் |
| ஆகின்றான் | நாட்டான் |
| ஆவான் | ஊரான் |

ஓன் இதுவும் அவன் விகுதியின் திரிபு.
படைத்தோன், படைப்போன், வில்லோன்.

அனன் ... அனை என்னுஞ் சுட்டிடைச்சொல்லுக்கு அன் விகுதி வர அனையன் என வந்தது. அது ஸர்வநாமம், 'அவன்' என்பது பொருள்.

அனையன் என்பது ஐகாரந்தொக அன் + அன் என நின்று அனன் ஆயிற்று. அவன் என்னும் ஸர்வநாமத்தைப்போல் இதுவும் விகுதியாய் வந்தது.

| | |
|---|---|
| வந்தனன் | செய்தனன் |
| வருகின்றனன் | செய்கின்றனன் |

இ ... குன்றவில்லி - 'குன்றை வில்லாகவுடையவன்.'

## (2) பெண்பால்விகுதி.

அள் ... வந்தவள், வருகின்றவள், வருபவள், உளள், பிறள், தாரினள், குழையினள்.

அவள் ... ஸர்வநாமம், அவள் என்னும் ஸர்வநாமத்தைப்போல் இதுவும் விகுதியாய்வந்தது. சிறியவள், கரியவள்.

ஆள் ... அவள் ஆள் எனத் திரிந்தது. வந்தாள், வருகின்றாள், வருவாள், தாரினாள், குழையினாள், ஊரார்.

ஓள் ... அவள் ஓள் எனத்திரிந்தது. வந்தோள், வருகின்றோள், சிறியோள், பெரியோள், தொடியோள், "நெடியோன் குன்றமுந் தொடியோள் பௌவமும்-சிலப்ப.

நல்லோள்.

ச் ... வாணிச்சி = வாணியன் + இ = வாணியி = வாணிச்சி, அன் விகுதி தொக்கது. யகரத்திற்கு சகரம்வந்தது.

வலைச்சி = வலையன், வாணிச்சியென்பதைப்போல்.

தி சம்படத்தி = செம்படவன் + இ = செம்படவி = செம்படத்தி. அன் விகுதிதொக்கது. வகரந் தகரமாய்த்திரிந்தது.

குறத்தி, குறவன்.

முடத்தி, முடவன்.

கி ... சிறுக்கி, சிறுக்கன்.

வி .. மனைவி

புதல்வி

மி ... சிறுமி, சிறுமன்.

ஐ .. உமை [உமா] வடமொழியீற்றாகாரம் தமிழில் ஐயாகின்றது.

சீதை [ஸீதா]

கோதை [கோதா]

இ . அலர்கண்ணி வடமொழியீற்றீகாரம் இகரமாய்க்குறுகும். கௌரி, பார்வதி, இலக்குமி.

(3) பலர்பால்விகுதி.

அர் வருவர் கரியர்

போவர் சிறியர்

குழையர் பெரியர்

என்மர் = என்னுவர் = என் + வர் = என் + மர் - உகரங் கெட்டது. வகரம் மகரமாய்த்திரிந்தது.

அவர் ... ஸர்வநாமம் விகுதியாய்வந்தது.

செய்தவர் சிறியவர் விண்ணவர்

செய்கின்றவர் கரியவர் இமையவர்.

செய்பவர் நாட்டவர்

ஆர் ... அவர் ஆர் ஆய்த்திரிந்தது.

செய்வார் சிறியார்
செய்கின்றார் கரியார்
செய்தார் இமையார்
நாட்டார்

கொண்மார் = கொள்வார் = கொள் + மார்
சென்மார் = செல்வார் = செல் + மார்
நடமார் = நடக்கு + மார், குகரங்கெட்டது.

ஓர் ... செய்வோர் சிறியோர்
செய்கின்றோர் கரியோர்
செய்தோர் இமையோர்
உணருமோர் உணருமவர் (தொல். உருபு. 12)

அனர் ... ஸர்வநாமமாகிய அனன் என்பதற்குப் பன்மை

செய்தனர் 'ஏங்குவனர் = ஏங்குவ + அனர்
செய்கின்றனர் "இருதலைவந்த பகைமுனைகடுப்ப,
இன்னுயிரஞ்சியின் றுவெய்து
யிர்த்த் ஏங்குவனர்" மதுரைக்
செய்வனர் காஞ்சி 402 - 404.
நகுவனர்
"கல்லாமாந்தரொடு நகுவனர்
திளைப்ப" ஷை 420.

அனார் ... அனை யென்னுஞ் சுட்டிடைச்சொல்லிற்கு ஆர் விகுதி சேர அனையார் என்னும் ஸர்வநாமம் வந்தது. 'அவர்' என்று பொருள். இச்சொல்லில் ஐகாரங் கெட, அன் + ஆர் = அனார் எனவந்தது. மொழி மனார், தொல். II. 175. எனமனார், தொல். II. 1.

மொழிமனார் = மொழியுவனார் = மொழி + மனார், மொழியு என்பதில் யகர உயிர்மெய்கெட மொழி என வந்தது.

என்மனார் = என்னுவனார் = என் + மனார், உகரக்கேடு.

திண்ணனார் = திண் + அனார், திண் - திண்மையுள்ள, பெரிய. கண்ணப்பனார். 183.

நடப்ப, நடப்பர் என்பதிலுள்ள அர் விகுதியின் ஈற்று ர்கரக்கெட்டது.

என்ப, "கண்ணென்பவாழுமுயிர்க்கு"

இர் மகளிா, மபணடிா.
யிர் நீயிா
விர் நீவிா, வர் விகுதியின் அகரம் இகரமாய்த்திரிந்தது.
யர் இளையர்
ஞர் கவிஞா = கவியா. யகரம் ஞகரமாயிற்று. இளைஞா.
சில் குரிசில், ஸ்ரீஎன்னுஞ்சொல் பெயாகளுக் கீற்றில்வந்து சிறப்பையும் பெருமையையுங்காட்டும்; உ. குருஸ்ரீ, மாதுஸ்ரீ, ஸ்ரீ என்பது திரு எனத்திரிந்து பின்பு சில் என மருவியது. அதுவே வடபாஷைகளுள் ஜீ என வரும்.
கள் .. வர் என்பது கள் எனத்திரிநதது. வகரம் ககரமாயும் ரகரம் ளகரமாயுந் திரிந்தன.
தெலுங்கில் பன்மை விகுதியாகிய ாரு என்பதும் வர் விகுதியின திரிபு
கார் .. வர் என்பதன்திரிபு, இது ாரு என்பதைப் போன்றது ஐயங்கார, அம்மங்கார, அத்தங்கார. தெலுங்கு சப்ததத்துவத்தில் விகுதியைப்பற்றிய உரையைப்பாாக்க. ப. 9 - 10.
மர் .. வடமா=வடவா.
மார் மாவிகுதி மாா எனத்திரிந்தது. தேவிமாா, தாய்மாா, தகப்பன்மாா.
அவர்கள். தேவாகள் மனிதாகள்
வந்தவாகள் விண்ணவாகள்
ஆர்கள் .. வந்தாாகள், ஆனாகள், ஆவாாகள்.
கண்மார். குருக்கண்மாா, கள் விகுதியும், மார் விகுதியுந் தொடாந்துவந்தன.

(4) அஃறிணையொருமை.

அம் † . ஸ. அம்

| | | |
|---|---|---|
| உ. | மரம | ஆட்டம் |
| | பலம் | பாட்டம் |
| | கரம் | ஊக்கம் |

மஹாருஜீ, ராம்ஜி, ஊத்தர்ஜி.

† அம் விகுதி தமிழில் அன், அத் (அது) எனத்திரிவதுபோல் க்ரீக்குப்பாஷையில் அந் எனவும், ஸமஸ்கிருதத்தில் அம் அம் எனவும் இலத்தின்பாஷையில் அம் எனவும் திரியும்.

ம் ... அம் விகுதியின் அகரங்கெட ம் என நிற்கும்.

| | | | |
|---|---|---|---|
| உ. | கராம் | கராகம் | வ. க்ராஹ: |
| | குழாம் | குழகம் | |
| | கடாம் | கடகம் | |
| | நாம் | நாமம் | |
| | காம் | காமம் | |
| | தோம் | தோசம் | வ. தோஷ: |
| | பேம் | பயம் | |
| | தேம் | தேயம் | வ. தேய: |

ப. க்ராஹ: என்பது ஈற்று விஸர்க்கம் தொக, அஃறிணை யொருமை அம் விகுதியேற்று ககர ரக ரங்களுக் கிடையில் அகரச்சாரியை பெற்று கராகம்எனநின்று, ஈற்று மகரத்தின்பின்னின்ற ககரவுயிர்மெய் கெட கராம் எனவந்தது. அப் படியே கடாம், குழாம் என்பவற்றில் ககர வுயிர்மெய்கெட்டது, நாம், காம் என்பவற் றில் மகரவுயிர்மெய்யும், தோமில் சகரவுயிர் மெய்யும் பேம்தேமில் யகரவுயிர்மெய்யுங் கெ ட்டன.

அன் அம்மின் மகரம் னகரமாயிற்று.

உ. எவன் (எது)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மரன் | மரம் | நிலன் | நிலம் | குலன் | குலம் |
| பயன் | பயம் | பிலன் | பிலம் | கடன் | கடம் |
| திறன் | திறம் | கலன் | கலம் | பொலன் | பொலம் |
| குளன் | குளம் | வலன் | வலம் | புலன் | புலம் |
| வளன் | வளம் | உலன் | உலம் | நலன் | நலம் |

தொல். எழுத்த. சூ. 81.

இந்தவிகுதியின் மகரமானது மரன், பயன், திறன் என்பன முதலியவற்றில் னகரமாய்த் திரிவதுபோல் உயிர்முதலாய்வரும் வேற்றுமையுருபு வரும்போதும் னகரமாய்த்திரிந்து பின்பு தகரமாய்த் திரியும்.

மரம் + ஐ = மரன் + ஐ
= மரத் + ஐ
= மரத்த் + ஐ
= மரத்தை

} தகரம் இரட்டித்தது.

மரம் + உ = மரன் + உ
= மரத் + உ
= மரத்து } உகரம்ஆறும்வேற்றுமை விகுதி.

அம்விகுதியின் மகரம் னகரமாய்த்திரிந்து பின்பு தகரமாய்த் திரிவதுபோல் தெலுங்கில் மகரம் பகரமாய்த்திரியும்.

தேசமு + உ என்பது
தேசவு என மாறுகிறது
தேசவு தேசத்து என்பதற்குச் சரியானது.

இந்த விஷயத்தைப்பற்றிய விவரங்களைப் பெயரியலில் காணலாம்.

இதனால் அத்து என்னுஞ் சாரியை கிடையாதென்று கொள்ளவேண்டும்.

அது .. அன்விகுதி னகரம் தகரமாய்த்திரிந்தது.
உகரம் அசைநிறைவிகுதியா யீற்றில் வந்தது.
செயதது சிறியது எவ்வது = எ + அது
செய்வது கரியது அல்லது = அல் + அது
செய்கின்றது பெரியது குடாது = குட + அது = குடவது - 'மேற்கு'
உனது, எனது, தனது.

ஆது ... அதுவின் அகரம் நீண்டது.
எனாது
நினாது
தனாது

அ ... அது எனபத னீறறுத் துகரம் தொக்கது.
"எண்ணென்ப வேனை யெழுத்தென்ப விவ்விரண்டுங்
கணணென்ப வாழு முயிர்க்கு."—குறள்.
என்னென்ப எண்ணென்பது, துகரங்கெட்டது.
எழுத்தென்ட எழுத்தென்பது, துகரங்கெட்டது.
"கறபனவூழற்றா . ஊத்தை வாயங்காத்தல்-மற்றுத்தம்
வல்லுருவஞ்சன்மினென்பவேமாபறவை
புல்லுருவஞ்சுவபோல்"
அங்காத்தல் . .. என்பவே ; என்பவே=என்பதுவே
"கூர்ங்கோட்டசுடுவ லென்புழி கூர்ங்கோட்டதென வொருமையா கற்பாலது". (தொல்-சொல்-429.சூ)

து ... அதுவின் அகரங்கெட்டது.

| | | |
|---|---|---|
| எது | சிறிது | இனிது |
| இது | பெரிது | அனைத்து |
| உது | கரிது | இனைத்து |
| | | எனைத்து |

ன் என், ஏன். எவன் என்னுஞ் சர்வநாமம் என், ஏன் எனக்குறுகியது.

அன்று அனையென்னுஞ் சுட்டிடைச் சொல்லிறகு துவ்விகுதி வர அனைத்து என வந்தது. ஐகாரங்கெட அன்து எனநின்றது. துவ்விகுதியின் தகரம் றகரமாய்த் திரிய, அன்று என ஆயிறறு. அதற்கு 'அது' என்று பொருள். அது என்னும் ஸர்வநாமத்தைப்போல அன்று என்பதும விகுதியாய்வந்தது.

வந்தன்று, நடந்தன்று, உண்டன்று.

வந்தன்று = வந்த + அன்று
நடந்தன்று = நடந்த + அன்று
உண்டன்று = உண்ட + அன்று

எற்று "தம்மினுங் கற்றாரைநோக்கிக் கருத்த
ழிக கற்றதெல்லாம்
எற்றேயிவர்க்கு நாமென்ற—நீதிநெறி.

எனையென்னுஞ் சுட்டுச்சொல்லிறகு து என்னும் விகுதி வர எனைத்து எள வந்தது, இது ஸர்வநாமம். ஐகாரஙகெட என்து என நின்று, துகர விகுதியின் தகரமும் னகரமும இரு றகரமாய்த் திரிய எற்று என மருவியது.

கூயின்று, கூயிறறு } = கூயினது
போயின்று, போயிற்று } = போயினது
அன்று = அலது
இன்று = இலது *

துவ்விகுதி டுவ்விகுதியாய்த் திரிந்தது.

குண்டுகட்டு = குண்டுகண் + து
குறுந்தாட்டு = குறுந்தாள் + து
பொருட்டு = பொருள் + து
உண்டு = உளது

| | | | |
|---|---|---|---|
| சு ... | சிறிசு | = சிறியது | = சிறிது |
| | பெரிசு | = பெரியது | = பெரிது |
| | புதிசு | = புதியது | = புதிது |
| | இலேசு | = எளியது | = எளிது |

இவ்விகுதி பெரும்பான்மை உலகவழக்கத்தில் வரும்.

## (5) அஃறிணைப்பன்மைவிகுதிகள்.

அவை ... ஸர்வநாமம் விகுதியாய்வந்தது.

| | |
|---|---|
| செய்தவை | சிறியவை |
| செய்கின்றவை | அரியவை |
| செய்பவை | குறியவை |
| பெரியவை | கடியவை |

அ .. வந்த, வருகின்ற, வருப; பெரிய, சிறிய, குறிய, கடிய } அவை விகுதியின் ஈற்றுவகர ஐகாரம் கெட, அ என்பது நின்றது. பலர்பால் விகுதியாகிய அ என்பதனைக்காண்க.

உரிஞுவ, திருமுவ, ஓடுவ, பாடுவ.

அன ... அனையென்னுஞ் சுட்டிடைச்சொல்லிற்கு அவ்விகுதியைச் சேர்த்தலால் அனைய என்னும் அஃறிணைப் பன்மைச் சர்வநாமம் உண்டாகின்றது. அது ஐகாரங்கெட, அன் + அ எனநின்று, அன்ன என வாகின்றது. இருனகரத்தில் ஒன்றுகெட அன என வருகின்றது. இதற்குப்பொருள் 'அவை'. அவை யென்னும் ஸர்வநாமத்தைப்போல் அன என்பதும் விகுதியாய்வரும்.

| | |
|---|---|
| வந்தன | செய்ம்மன. (தோல் II. 222) |
| வருகின்றன | செய்யுவன= |
| வருவன | செய்வன= |
| உருஞுவன | செய்ம்மன, உகரக்கேடு, வகரம் மகரமாய்த்திரிந்தது. |
| உண்பன | மகரம் இரட்டித்தது. * |

கள் ... மரங்கள், கள்விகுதி வர் விகுதியடியாய்ப்பிறந்தது.

பறவைகள். உயர்திணைப்பன்மைக்கேயுரியதானபோதிலும் பிரயோகத்தினால் அஃறிணைப் பன்மைக்கும் வந்தது.

---

* சென்மார், கடமார் என்னுஞ் சொற்களைப்பார்க்க.

அவைகள், அவை யென்னும் பன்மைவிகுதியோடு கள்விகுதி சேர்ந்துவந்தது.

(6) தன்மை ஒருமைவிகுதி.

ஏன் * .. நான் என்பதற்கு முதனிலையாகிய ஆன் என்பதன் ஆகாரம் ஏகாரமாய்த்திரிந்தது.

செய்தேன் — தாரினேன்
செய்கின்றேன் — அடியனேன்=அடியன்+ஏன்
செய்வேன்
'அடியனாகிய யான்'
சிறியனேன்=சிறியன்+ஏன்,
'சிறியனாகியயான்.'

என் ... ஏன் என்பதன் ஏகாரம் குறுகியது.

உண்குவென் — தாரினென்
சிறியனென்=சிறியன்+என்,
'சிறியனாகிய யான்.'
அடியனென்

அன் .. நான்என்பதன் முதனிலையாகிய ஆன் என்பதன் ஆகாரம் குறுக அன் எனவந்தது.

கூறுவன், கூறுவேன்.

"எழுத்தசைசீர் பந்தமடிதொடைபாவினங்கூறுவன்"

இலன் 'இல்லேன்,' "இலனென்னு மெவ்வ முரையாமையீதல், குலனுடையான் கண்ணேயுள" குறள்.

புரிவன் = புரிவேன், "பெறலரியவரசாளும் பேறுபெறலாயிருக்க, இறைதவசீபுரிவனெனனு சினைவுதகா தெனவுரைததான்". கோயில். இரணிய. 44.

அல் .. அன் விகுதியின் னகரம் லகரமாய்த்திரிந்தது.

கெடுவல்=கெடுவேன், "கெடுவல் யானென்பதறிக தன்னெஞ்ச நடுவொரீஇயல்லசெயின்"—குறள்.

உரைப்பல்=உரைப்பேன், "சென்றிறைவற்குரைப்பலெனச் செழியர்தவக்கொழுந்தனையாள்" - திருவிளை. உண்பல், வருவல், உண்ணாநிறபல்.

---

* தன்மை முன்னிலைகளில் வரும் விகுதிகள் எல்லாம் ஸர்வநாமங்களின் சிதைவு.

ஏம்விகுதி ஓம், உம் எனத் திரிந்ததுபோல் ஏன் விகுதி ஓன், உன் எனத் திரிந்தது. ஓன் வழக்கத்தி லில்லை; உன் என்பது னகரங்கெட்டு உ ஆயிற்று. இவ்விகுதி னகரவீறுயிருந்ததென்பதற்குத் தெலுங்கிலுள்ள உன்னீறறு வினைகளே நிதரிசனம். இந்த உ விகுதி இடைநிலை வகரத்தின் இடத்தில்வரும் க், ட், த், ற் என்னும் எழுத்துக்களோடு சேர்ந்து வரும்.

உண்கு = உண்பேன்
என்கு = என்பேன்
கோடு = கொள்ளுது = கொள்ளுவேன்
சேறு = செல்லுது = செல்லுவேன்

இப்படியே பன்மையில் உம்விகுதி வரும். க், ட், த், ற் என்னும் எழுத்துக்கள் எதிர்கால விடைநிலைகளெனவும், உ, உம் என்பவை தன்மைவிகுதிகளெனவும் அறியவேண்டும்.

| | | |
|---|---|---|
| செல்லுது | చెల్లుదును | செல்வேன் |
| வெல்லுது | గెలుచుదును* | வெல்வேன் |
| நில்லுது | నిలుచుదును* | நிறபேன் |
| கொள்ளுது | కొనుదును | கொள்வேன் |
| காணுது | కనుదును | காணபேன். |

| | |
|---|---|
| செல்லுது | சேறு |
| வெல்லுது | வேறு |
| நில்லுது | நிற்று |
| கொள்ளுது | கோடு |
| காணுது | காண்( |

செல்லுது; செல்லுவு = செல்லுது, வகரம் எதிர் கால இடைநிலை, உகரம் தன்மை யொருமைவிகுதி, வகரத்தைப்போல தகரமும் எதிர்காலத்தைக் காட்டுகின்றது;

= செல்+து, உகரங்கெட்டது;

---

* గెలుచుదును, నిలుచుదును, என்பவை గెలుతును, నిలుతును எனக் குறுகிவரும்.

= செற்+று, பகுதியீற்றுலகாரமும் விகுதி தகரமும் றகரங்களாய்த் திரிந்தன;

= செ+று, பின்னின்ற றகரம் தொக்கது;

= சேறு, அதன்பின்னின்ற எகரம் நீண்டது;

இவ்வாறே-வெல்லு வேறு ஆயிற்று. 7-வதும்பார்.

நில்லுது - நிற்று ஆயிற்று, உகரங்கெட்டு லகர தகரங்கள் றகரம்களாய்த் திரிந்தன.

கொள்ளுது=கொள்ளுவு=கொள்ளுவ+உ, வகர இடைநிலை, உவிகுதி;

= கொள்+து } உகரங்கெட்டு ளகரதகரங்கள் டக
= கொட்+டு } ரங்களாகத் திரிந்தன;

= கோடு; இருடகரங்களில் பின்னின்றது கெட அதற்குப் பின்னின்ற ஓகரம் நீண்டது. 7-வதும்பார்.

காண்டு=காணுவ+உ=காணுத+உ= காணுது= காண்டு.

(13) தன்மைப்பன்மைவிகுதிகள்.

ஆம் ... நாம் என்னும் ஸர்வநாமத்திற்கு முதனிலையாகிய ஆம் என்னும் ஸர்வநாமம் விகுதியாய்வந்தது.

உ. உண்ணுநின்றும் தாரினும்
உண்பாம்
கேட்பாம்
ஆடுவாம்

ஆடாம்=ஆடுவாம், உகரவகரங்கள்கெட்டன.

"பாம்புகயிறாக் கடல்கடைந்தமாயவன்
ஈங்குநம்மானுள் வருமேலவன்வாயில்
ஆம்பலந்தீங்குழல் கேளாமோ தோழி" சிலப்ப.
கேளாம் = கேட்பாம் = கேளுவாம்

"கன்றுகுணிலாக்கனியுகுத்தமாயவன்
இன்றுநம்மானுள்வருமேலவன்வாயில்
கொன்றையந்தீங்குழல்கேளாமோதோழி". ஷை

ஏம் ... ஆம் விகுதியின் ஆகாரம் ஏகாரமாயிற்று.

உ. உண்டேம்
உண்ணுநின்றேம் செய்யேம்
உண்பேம் கொடேம்

உண்ணேம்
தாரோம்

எம் ... ஏம் விகுதியின் ஏகாரங்குறுகியது.
உ. உண்ணுவெம்
உண்பெம்
அஞ்சினெம்
தாரினெம்
கரியெம்

அம் ... நாம் என்பதன் முதற்பகுதியாகிய ஆம்எனும் ஸாவநாமத்தின் ஆகாரம் குறுகியது.

| | | | |
|---|---|---|---|
| உ. | உண்பம் | பாடுகம் | தொல். II. |
| | உண்குவம் | கலக்கினம் | சேனு. |
| | உரிஞுவம் | தெருட்டினம் | நச்சி. |
| | செல்லுவம் | செல்கம் | |
| | உரைப்பம் | | |
| | வருவம் | | |
| | தாரினம் | | |
| | அனையம் | | |

கடலையனையம்யாங் கல்வியாலென்னும்
அடலேறனைய செருக்காழ்த்தி - விடலே நன்னெறி.

ஓம் ... ஆமென்பதின் ஆகாரம் ஓவாயிற்று.
உ. உண்டோம்
உண்ணுகின்றோம்
உண்போம்
தாரிேனாம்.

"வந்தோம் சென்றோம் என வழக்கினுள் வருவனவோவெனின் அவை ஏமீற்றின் சிதைவெனமறுக்க". சேனு. தொ. II. 208.

உம் ... ஓம்விகுதியின் ஓகாரம்குறுகி உ ஆயிற்று.
உ. உண்கும் = உண்ணுவ + உம் = உண்+வும்= உண்கும்; உகரங்கெட்டது; வகரங் ககரமாய்த் திரிந்தது.
உண்டும் = உண்ட+உம் 'உண்டோம்'
வந்தும் = வந்த + உம் 'வந்தோம்'
வருதும் = வருவ+ உம் = வருவும் = வருதும், வகரம் தகரமாய்த் திரிந்தது

செய்தும் = செய்த + உம் 'செய்தோம்'
செய்வ + உம் 'செய்வோம்'

செல்லுதும் = செல்லுவ + உம்
= செல் + தும்
= செற் + றும்
= சேறும

} சேறு என்பதைப் பார்க்க.

அப்படியே வெல்லுதும் = வேறும்
கொல்லுதும் = கோறும்

கொள்ளுதும் = கொள்ளுவ + உம்;
= கொள் + தும்
= கொட் + டும்
= கோடும்

} கோடு என்பதைப் பார்க்க.

அப்படியே

காண்டும் .. காணுதும்

"எய்தல்காண்டுங்கொலின்னமென்றறிதின்வந் தெய்தி"—இட்கி.

"கொள்ளுமா கொள்வோர்க்குக் காண்டுமே மாநிதியம்."—நீதிநெறி.

போதும் . போவோம்

"பூம்போ தவிழ்க்கும் புனலுடன் பொன்மகளே
நாம்போது மென்று னளன்" நளவெண்பா.

உய்தும் உய்வோம்

உய்து நாமென விரைவிலேடினன் மலைமுழையின் இட்கி.

மீடும் .. மீளுவோம்

"மின்னிடைச் சனகியை மீட்டு மீடுமால்
பொன்னுடைச் சிலையினாய் விரைந்து போயென்றான்"
- இட்கி.

ஆதும் .. ஆவோம்

"ஓஒதல் வேண்டு மொளிமாழ்குஞ் செய்வினை
ஆஅது மென்னு மவர்" குறள்.

"ஈத லிசையா திளமைசே ணீங்குதலாற்
காத லவரும் கருத்தல்லா - காதலித்த்
ஆதுநா மென்னு மவாவினைக் கைவிட்டுப்
போவதே போலும் பொருள்." நாலடி.

நாம் ஆதும் 'நாம் செல்வத்தில் ஆவோம்' பெருகு வோ மெனப்பொருள்.

**அனெம்** ... அனையென்னுஞ் சுட்டிடைச் சொற்கு எம் விகுதியைச் சேர்க்க அனையெம் என வந்தது. அதன் ஐகாரங் கெட அன் + எம் என நின்று அனெம் எனவந்தது. அது ஸாவநாமம்.

'நாம்' என்னும் பொருள். விகுதியாய் வந்தது.

உ. உண்டனெம்
உண்ணுநின்றனெம்
உண்கின்றனெம்

**அனம்** ... மேற்கண்ட அனையென்பதற்கு அம் விகுதிசேர அனை யம் எனவந்தது. ஐகாரங்கெட அனம் எனவந் தது. ஸாவநாமம் விகுதியாயிற்று.

உ. உண்டனம்
உண்ணுநின்றனம்
வந்தனம் தந்தனம்

**14. முன்னிலை ஒருமைவிகுதிகள்.**

.. நீயென்னும் ஸாவநாமத்தின் முதற் பகுதியாகிய ஈன் என்பது னகரங்கெட ஈ ஆயிறறு.

உ. **சென்றீ** = செல்லுதி
'**சென்றீ** பெருமநிற்றகைக்குநர்யாரோ'
'சென்றீ' என்பது ஏவலொருமையில் வந்தது வழுவு. சேறீ என இருக்கவேண்டும்

உண்டீ
உரைத்தீ } தொல் II. 170.

ஐ ... ஈ ஐ ஆயிற்று.

உண்பை = உண்ணுவ + ஐ
தாரினை
பாடித்தை = பாடின + ஐ. னகர விடைநிலைக் குப் பதிலாய்த் தகரவிடைநிலை வந்தது. தெலு ங்கில் ౘాడితి எனவும் கன்னடத்தில் ಹಾಡಿದಿ எனவும் வரும். பாடித்தை 'பாடினாய்'

... ஈ விகுதி குறுகியது.

உண்டி = உண்ட + இ. 'உண்டாய்'
உண்ணுநின்றி = உண்ணுநின்ற + இ.

செல்லுதி = செல்லுவ + இ, இடைநிலைவகரம் தகரமாய்த் திரிந்தது ;
வெல்லுதி = வெல்லுவ + இ,
வருதி = வருவ + இ.

'வருதி பெயாதி வருந்துதி துஞ்சாய் பொருதி புலம்புதி நீயும்' நன்-வி.

காணுதி = 'காண்பாய்'

"காணுதி மெய்ம்மையென்று தம்பிக்குக் கழறிக்கண்ணன்"—கிட்கி.

நவிறி = நவிலுதி

"நகையுடை முகததாயாகிப் பின்னுளை நவிறி நாவால்" — ஷை.

அறிவாய்

"பிறிது மன்னவன் பெருவலியாற்றலைப் பெரியோய் அறிதியென் னினுமுண்டுபாயம்"—ஷை.

கண்டி = கண்ட + இ. டகரம் இறந்தகால இடைநிலை.

காண்டி = காணுதி. டகரம் எதிர்கால இடைநிலை.

"காவலுக்குரியதென் றுலன்னதுகருதிக்காண்டி"ஷை

கொண்டி = கொண்ட + இ ; டகரம் இறந்தகால இடைநிலை.

கோடி = கொள்ளுதி ; டகரம் எதிர்கால இடைநிலை.

"வனிதையை நாடிக் கோடி வானினு முயர்ந்ததோளாய்" ஷை

"ஒன்றுனக் குரைப்பதுண்டா லுறுதியஃ துணர்ந்துகோடி"—ஷை.

சென்றி = சென்ற+இ ; றகரம் இறந்தகால இடைநிலை.

சேறி = செல்லுதி; றகரம் எதிர்கால இடைநிலை.

வென்றி = வென்ற+இ ; றகரம் இறந்தகால இடைநிலை.

வேறி = வெல்லுதி. வேறு என்பதைப்பார்.

நின்றி = நின்ற + இ

நிற்றி = நில்லுதி

விற்றி = விற்ற + இ
விற்றி = வில்லுதி

இவ்வாறு இகரவிகுதியைப்பெற்று எதிர்காலத்திலும் இறந்தகாலத்திலும் வரும் வினைகளின் வேறுபாட்டினை இடைநிலை விதிகளில் காண்க.

ஆய் ... ஐ ஆய் ஆகத்திரிந்தது
உண்டாய்
உண்ணுகின்றாய் வில்லாய்
உண்பாய்

வாராய்
நடவாய்
செய்யாய்
கேளாய்
அஃகாய்
} முக்காலத்திற்கும் பொதுவான எதிர்மறை அல்லது உடன்பாட்டேவல் ஒருமை.

ஓய் ... ஆய் விகுதியின் ஆ ஓ ஆயிற்று
வந்தோய் = வந்தாய்
'வந்தோய்மன்ற தெண்கடற்சேர்ப்ப.'
கொடுத்தோய் = கொடுத்தாய்
'பெருஞ்சோற்று மிகுபதம் வரையாது கொடுத்தோய்'
342 - நன்-வி.

## 15. முன்னிலைவிகுதி (பன்மை)

ஈவிர் என்னும் ஸர்வநாமம் குறுகி ஈர் ஆயிற்று.
உண்டீர் உண்ணுகின்றீர் உண்பீர் குழையினீர் குழையீர்
எல்லீர் 'எல்லாநீவிர்'
சான்றீர் 'சான்றவரான நீங்கள்'

இர் ஈர் விகுதியின் ஈகாரங்குறுகியது.
வருதிர் தருதிர் சேறிர், வேறிர், கூறிர், கோடிர்.
இ விகுதியைப்பார்க்க.
உண்குவிர் குழையினிர்

அனிர் அனையென்னுஞ் சுட்டிடைச் சொல்லிற்கு இர் விகுதி சேர்க்க அனையிர் என வந்தது. ஐகாரங்கெட அன் + இர் என நின்று அனிர் என்றாயிற்று.
உண்டனிர்
உண்ணுகின்றனிர்

**மோ.** ... உம்விகுதியின் உகரங்கெட நின்ற மகரத்தோடு ஓகார வசை சேர்ந்து வந்தது.

உரைமோ உரையும் "முதுமறையந்தணிர முன்னிய துரைமோ" கேண்மோ=கேளுமோ 'கேளும்' "மாமறைமாக்கள் வருகுவுங் கேண்மோ" நன். வி. 329.

**மா.** ... மேற்கண்ட உம்விருதியின் மகரம் ஆகாரவசையோடு சேர மா விகுதிவரும்.

**உண்கமா** உப்பின்று புற்கை **யுண்கமா** கொற்கை யோனே. நன். வி.

உண்க+உம்+ஆ=உண்க+ம்+ஆ=உண்கமா

இவ்வாறு தெலுங்கில் எதிர்மறையில்வரும்.

| | | |
|---|---|---|
| தின்கமா, | తిన్నకమా | தின்னற்கமா |
| செய்கமா, | చేయకమా | செய்யற்கமா |
| விடுகமா, | విడువకమా | விடற்கமா. |

40. வினைகள், முற்று, எச்சம் என இருவகைப்படும். வாக்கியத்தை முடிக்கும் வினை **முற்றுவினை.** முடிக்காதது **எச்ச வினை.**

41. எச்சவினை இருவகைத்து, **பெயரெச்சம், வினையெச்சம்.** பெயரைத்தழுவியது **பெயரெச்சம்.** வினையைத்தழுவினது **வினையெச்சம்.**

42. இன்னும் வினை யிருவகைத்து; **தெரிநிலைவினை, குறிப்புவினை.** இடைநிலையாலு மற்ற வகையாலுங் காலங்காட்டுவது **தெரிநிலைவினை**; காலங்காட்டாதது குறிப்பு வினை. முதல் முடிவிய பொருளில் வரும் வினைகள் இடைநிலை பெறாதவிடத்தும் தெரிநிலைவினைகளாம். நீ செல், நீ வாழ்க என்பவற்றில் எவலும் வியங்கோளும் இயல்பினால் தொழில் இனிமேல் நிகழ்வது என்று குறிக்கின்றன.

| | | | |
|---|---|---|---|
| நி. வருகின்றான் | தெரிநிலை. | கரியன் | குறிப்புவினை |
| எ. வருவான் | | நல்லன் | |
| இ. வந்தான் | | தாரினன் | |
| | | ஊரான் | |
| | | ஊரன். | |

43. முற்றுவினைகள் நான்குவகைப்படும்.

1. **நிகழ்காலவினை.**
2. **எதிர்காலவினை.**

3. எதிர்காலவினை.
4. ஏவல்முதலியவினை.

44. தொடங்கப்பட்டு முடியாத செய்கையைக் காட்டுவது நிகழ்காலவினை.

45. முடிந்த செய்கையைக் காட்டுவது இறந்தகாலவினை.

46. இனிமேலுண்டாகுஞ் செய்கையைக் காட்டுவது எதிர்காலவினை.

47. ஏவல் - வியங்கோள்முதலிய பொருளுடையன ஏவல்முதலியவினை.

| | | | | |
|---|---|---|---|---|
| உ. | வா | போ | தா | வாழ் |
| | வருவது | போவது | தருவது | வாழ்வது |
| | வரல் | போகல் | தால் | வாழல் |
| | வருக | போக | தருக | வாழ்க |
| | வருதல் | போதல் | தருதல் | வாழ்தல் |

இவற்றில் ஒவ்வொன்றும் ஏவல், விதி முதலிய பலபொருள்களைத் தருவதனுல் அவற்றின் பொருள்களை விதவாது பொதுவாய் அவற்றிற்கு ஏவல்முதலியவினை யென்று பெயர் தரப்பட்டது.

48. இடைநிலைகளைப் பெற்றுவரும் எல்லா முற்றுவினைகளும் எதிர்மறைப் பொருளில்வரும் வினைகளும் தொடர் மொழிகள். அவற்றில் நிலைமொழி முக்காலங்களுக்குரிய பெயரொச்சங்கள் வருமொழி ஸர்வநாமம். இத் தொடர்மொழிகள் தம்முள் விரவி சந்தியால் விகாரப்பட்டு வரும்.

வந்தவன் = வந்த + அவன்
வந்தவள் = வந்த + அவள்
வந்தவா = வந்த + அவர்
வந்தது = வந்த + அது
வந்தவை = வந்த + அவை
வந்தாய் = வந்த + நீ *
வந்தீர் = வந்த + நீர் *
வந்தேன் = வந்த + நான் *
வந்தேம் = வந்த + நாம் *

---

* முன்னிலையிலும் தன்மையிலும் ஸர்வநாமம் விகுதியாய் வந்ததை விகுதிப் பிரகரணத்தில் பார்.

முதன்மூன்றுவினைகளும் வந்தான்
வந்தாள்
வந்தார் எனவும்
வந்தது } வந்த - எனவும் விகாரப்
வந்தவை } பட்டுவரும்

வந்தவன் என்னுந் தொடர்மொழியில் வந்த என்னும் இறந்தகாலப் பெயரொச்சமும் அவன் என்னுஞ் சர்வநாம விகுதியும் வந்தன. அத்தொடர்மொழிக்கு 'வருகையென்னுந் தொழிலைச்செய்த அவன்' என்றுபொருள். இப்படிக்குப் பொருள் கொண்டால் அவன்வந்தவன்என்னும் வாக்கியத்தில் அவன் என்னுஞ் சர்வநாமம் இரண்டு தடவை வருகின்றது. ஆகையால் கூறியது கூறல் என்னுங் குற்ற முளதாகும். என்றாலும் இத்தொடர்மொழியிலுள்ள அவன் என்பது தன்பின்வந்த பெயரொச்சத்தோடு ஓர் சொல்லாய் நின்றபின் விகுதித் தன்மையைப் பூண்டது. ஆகவே கூறியது கூறலென்னுங் குற்றம் நீங்கியது. இவ்வாறு மற்றவினைகளிலும் கடையில் வந்தவைகளை விகுதியாய் வந்த சர்வநாமமாகக் கொள்ளவேண்டும்.

ஒழிந்த காலங்களில் வரும் வினைகளையும் இவ்வாறு பெயரொச்சங்களும் சர்வநாமங்களுமாகப் பிரிக்க வேண்டும்.

| | | | | |
|---|---|---|---|---|
| வருகின்றவன் | = | வருகின்ற | + | அவன் |
| வருகின்றவள் | = | வருகின்ற | + | அவள் |
| வருகின்றவர் | = | வருகின்ற | + | அவர் |
| வருகின்றது | = | வருகின்ற | + | அது |
| வருகின்றவை | = | வருகின்ற | + | அவை |
| வருகின்றாய் | = | வருகின்ற | + | நீ |
| வருகின்றீர் | = | வருகின்ற | + | நீர் |
| வருகின்றேன் | = | வருகின்ற | + | நான் |
| வருகின்றேம் | , | வருகின்ற | + | நாம். |
| வருகின்றவன் | , | வருகின்றான் | | |
| வருகுன்றவள் | , | வருகின்றாள் | | |
| வருகின்றவர் | , | வருகின்றார் | | |

எனவும் குறுகிவரும். வருகின்றது, வருகின்றவை, வருகின்ற என ஈற்றுத் துகரமும் வைகாரமும் தொக்குவரும். அப்படியே,

வருபவன் = வருவ * + அவன்
வருபவள் = வருவ + அவள்
வருபவர் = வருவ + அவர்
வருவது = வருவ + அது
வருபவை = வருவ + அவை
வருவாய் = வருவ + நீ
வருவீர் = வருவ + நீர்
வருவேன் = வருவ + ஏன்
வருவேம் = வருவ + ஏம்
வருபவன், வருவான்,
வருபவள், வருவாள்,
வருபவர், வருவார் வருவர்,
வருபவர் } வருப,
வருவது }
வருவான் } வரும்,
வருவாள் }
வருவது }
வருவ } எனமாறிவரும்.

வருபவன் என்பவற்றில் இடைநிலை வகரம் பகரமாய்த் திரிந்தது.

மேல்வந்த வினைகளில் அவன் அவள் அவர் முதலாகிய சர்வநாமங்கள் விகுதியாய் வந்ததுபோல அடியில்வரும் வினைகளில் அனன் முதலிய ஸர்வநாமங்கள் விகுதியாய் வந்தன.

ப. { அனன், அனள், அனர், அன்று, அவை } மு. { அனை, அனிர் } த. { அனென், அனெம் }

இறந்தகாலம்.

வந்தனன் = வந்த + அனன்
வந்தனள் = வந்த + அனள்
வந்தனர் = வந்த + அனர்

* வருவ என்பது வரும் என்னும் பெயரெச்சத்தின் முதனிலையாம். ஈற்றக்ஷரத்தொக்க வகரம் மகரமாய்த் திரிய வரும் என வந்தது. (120-ம் விதியைப்பார்க்க.)

| | | | | |
|---|---|---|---|---|
| வந்தன்று | = | வந்த | + | அன்று |
| வந்தன | = | வந்த | + | அன |
| வந்தனை | = | வந்த | + | அனை |
| வந்தனிர் | = | வந்த | + | அனிர் |
| வந்தனென் | = | வந்த | + | அனென் |
| வந்தனெம் | = | வந்த | + | அனெம். |

நிகழ்காலம்.

| | | | | |
|---|---|---|---|---|
| வருகின்றனன் | = | வருகின்ற | + | அனன் |
| வருகின்றனள் | = | வருகின்ற | + | அனள் |
| வருகின்றனர் | = | வருகின்ற | + | அனர் |
| வருகின்றன்று | = | வருகின்ற | + | அன்று |
| வருகின்றன | = | வருகின்ற | + | அன |
| வருகின்றனை | = | வருகின்ற | + | அனை |
| வருகின்றனிர் | = | வருகின்ற | + | அனிர் |
| வருகின்றனென் | = | வருகின்ற | + | அனென் |
| வருகின்றனெம் | = | வருகின்ற | + | அனெம். |

எதிர்காலம்.

| | | | | |
|---|---|---|---|---|
| வருவனன் | = | வருவ | + | அனன் |
| வருவனள் | = | வருவ | + | அனள் |
| வருவனர் | = | வருவ | + | அனர் |
| வருவன்று | = | வருவ | + | அன்று |
| வருவனை | = | வருவ | + | அனை |
| வருவனிர் | = | வருவ | + | அனிர் |
| வருவனென் | = | வருவ | + | அனென் |
| வருவனெம் | = | வருவ | + | அனெம் |

இவ்வாறு எதிர்மறைவினைகளையும் பெயரொச்சங்களா யும் ஸர்வநாம விகுதிகளாயும் பிரிக்கவேண்டும்.

| | | | | |
|---|---|---|---|---|
| வாராதவன் | = | வாராத | + | அவன் |
| வாராதவள் | = | வாராத | + | அவள் |
| வாராதவர் | = | வாராத | + | அவர் |
| வாராதது | = | வாராத | + | அது |
| வாராதவை | = | வாராத | + | அவை |
| வாராதாய் | = | வாராத | + | நீ |
| வாராதீர் | = | வாராத | + | நீர் |
| வாராதேன் | = | வாராத | + | நான் |

* (4)ல் அன்று விகுதியைப்பார்.

| | | |
|---|---|---|
| வாராதேம் | வாராத + நாம் | |
| வாராதவன், | வாராதான் | வாரான் |
| வாராதவள், | வாராதாள் | வாராள் |
| வாராதவர், | வாராதார் | வாரார் |
| வாராதது, | | வாராது |
| வாராதவை, | வாராத | வாரா |
| வாராதாய், | | வாராய் |
| வாராதிர், | | வாரீர் |
| வாராதேன், | | வாரேன் |
| வாராதேம், | | வாரேம் |

எனவிகாரப்பட்டும்வரும்.

இவ்வினைகளெல்லாம் பெயரொச்சமும் ஸர்வநாமமும் தொடர்ந்துவந்த தொடர்மொழிகளாதலால் பகுபதப் பொருளால் அவைகள் பெயர்ச் சொற்களாம்; வினைகளாய் வருவது பிரயோகம் பற்றியே. அவை வாக்கியத்தில் பயனிலையாய் வந்தக்கால் வினையென்றும் வேற்றுமைகளை யேற்றுவந்தாலும் எழுவாயாய்வந்தாலும் வினையாலணையும் பெயர்களென்றும் அறியவேண்டும்.

ஆவானையாரேயழிப்பர்" நாலடி.

ஆவானையென்பது இரண்டாம்வேற்றுமை யுருபேற்ற வினையாலணையும்பெயர்.

அழிப்பர் அழிப்பாரென்று பொருள்தந்து வினையாய் நின்றது.

"மலர்மிசையேகினான் மாணடிசேர்ந்தார்
நிலமிசை நீடு வாழ்வார். குறள்.

ஏகினான் என்பது அதுஎன்னும் ஆறும் வேற்றுமை தொக்குவந்த வினையாலணையும் பெயர்.

சேர்ந்தார் வாக்கியத்திற்கு எழுவாயாய் முதல்வேற்றுமையில் வந்தது.

வாழ்வார் வினை.

49. நிகழ்காலம்.

**இக்காலவழக்கில்வரும் கிறு - கின்று இடைநிலை தொல்காப்பியத்தில் சொல்லப்பட வில்லை. பெயரெச்சங்களை யெடுத்துச்சொல்லும் சூத்**

தீரத்தில் செய்த செய்யும் என்னு மிரண்டு பெயரெச்சங்கள் ஓதப்பட்டனவே யன்றி கின்று இடைநிலைப்பெற்ற நிகழ்காலப் பெயரெச்சம் ஓதப் படவில்லை. தெலுங்கிலும் கன்னடத்திலும் முறையே உந் - உவ் ஈற்றிலுள்ள எதிர்காலப் பெயரெச்சம் நிகழ்காலத்தைக் குறிப்பதனாலும், தமிழில் உம்மீற்றுப் பெயரெச்சம் வினையெச்சம் நிகழ்காலத்திலும் எதிர்காலத்திலும் வருமென்று தொல்காப்பியம் நன்னூல் முதலிய நூல்களினாலும் அவற்றின் உரைகளாலும் தெரியவருவதினாலும், தமிழில் தொல்காப்பியம் இயற்றப்பட்ட காலத்தில் கின்று என்னும் இடைநிலை இருக்கவில்லையென்றூகிக்கலாம். மலையாளத்திலும் பழைய கன்னடத்திலும் கின்று இடைநிலை கிடையாது.

"முந்நிலைக்காலமுந் தோன்றுமியற்கை
யெம்முறைச்சொல்லு நிகழுங்காலத்து
மெய்ந்நிலைப் பொதுச்சொற் கிளத்தல்வேண்டும்" தொல் II - 237 - சூத்திரம்.

"மலைநிற்கும் ஞாயிறியங்கும் திங்களியங்குமெனவும் 'வெங்கதிர்க் கனலியோடு மதிவலந் திரிதரு நந் தண்கடல் வையத்து' எனவும்வரும். நிகழ்காலத்துச் சொல்லாயினும் ஒருகாற் பொதுவாகலுடைமையாற் பொதுச்சொல் லென்றார், நிகழ்காலச்சொல் இறந்தகாலமு மெதிர்காலமு முணர்த்துதல் வழுவாயினும் அமைகவென வமைத்தவாறு. சேனவரையர் விருத்தி.

செய்யு நிகழ்பெதிர்வும் என நன்னூல்வினை யியலில்வருஞ் சூத்திரத்துக்கு செய்யு மென்னும் வாய்பாட்டு முற்றுவிததி நிகழ்காலத்தையும் எதிர்காலத்தையும் ஏற்றுவரும் எனவிருத்தி.

*"செய்ம்மனசெய்யுஞ் செய்தவென்னும்
அம்முறைநின்ற வாயெண்கிளவியும்" தொ II-219*

"செய்யுமென்பது முற்று மெச்சமுமாகிய விரு நிலை மையுமுடைத்தாயு மீற்று னிகழ்காலமுணர்த்தும்" சேனாவரையர்.

நிலனும் பொருளுங் காலமுங் கருவியும்
வினைமுதற் கிளவியும் வினையு முளப்பட
அவ்வறு பொருட்கு மோரன்ன வுரிமைய,
செய்யுஞ் செய்த வென்னுஞ்சொல்லே. தொல். II 231.

"இனி ஆடரங்கு, செய்குன்று, புணர்பொழுது, அரிவாள், கொல்யானை, செல்செலவு என நிலமுதலாகிய பெயரெச்சந் தொக்க வினைத்தொகைகளை விரிக்குங்கால், ஆடினவரங்கு எனச்செய்தவென்னும் பெயரெச்சத்திறு விரிந்த அகரவீறு இறப்புணர்த்தியும், ஆடாநின்றவரங்கு ஆடுமரங்கு எனச்செய்யுமென்னும் பெயரெச்சத்திறு விரிந்த **உம்மீறு நிகழ்வு மெதிர்வு முணர்த்தியும்** அவற்றுளுய புடைபெயர்ச்சியைத் தோற்றுவித் திரண்டு பெயரெச்சமும் ஒரு சொற்க ணொருங்கு தொக்கு நிற்றலின் அதனை யொரு பெயரெச்சத்தின்கண் அடக்கிப் புணர்க்க லாகாமையின் புணர்க்கலாகா தென்றார். உம்மிறுதி நிகழ்வு மெதிர்வுமுணர்த்து மாறுவினையின் றொருகுதியென்னு மெச்சவியற் சூத்திரத்துட் கூறுதும்" தொல் I எழு குற்றி 77 நச்சினார்க்கினியர்.

**50. கின்று இடைநிலைக்கு முன் உந் என்னு மிடைநிலை நிகழ் காலத்திலும் எதிர் காலத்திலும் வழங்கி வந்தது.**

**ஆகுந** = ஆகுவ
**வருந** = வருவ
**றழுந** = றழ்வ
**மிகுந** = மிகுவ
**உழுநர்** = உழுவர்

**அறிஞன்** = அறிநன் = அறியுநன் 'அறிகின்றவன்.
அறியுநன் = அறி + உந் + அன்-உந்விகுதி நிகழ்காலத்தையு மெதிர்காலத்தையுங் காட்டுமிடைநிலை. அறியுநனன் என்பது உந்விகுதியின் உகாரங்கெட அறி + ந் + அன் எனநின்றது. நகரம் ஞகரமாய்த் திரிய அறிஞன் எனவந்தது.

மேற்கண்ட வினைகளில் வரும் உங் * என்னும் இடைநிலைக்கு மூலமாகியது உத் என்னு மிடைநிலை. இதுவே பிற்காலத்தில் உவ் எனததிரிந்தது. உவ்விடைநிலையானது கன்னடத்தில் நிகழ்காலத்தையும் எதிர்காலத்தையும காட்டுகின்றது. தமிழிலும் செய்யுமென்னு முற்றும் எச்சமும் அவ்விரண்டுகாலத்தையுங் காட்டும். செய்யுமென்னு மெச்சம் செய்யுவ என அகரவீறாய் நின்றது. பிற்காலத்தில் அகரங்கெட வகரமானது மகரமாய்த் திரிந்தது. இந்த உவ்விடை நிலைக்கு முதனிலையாகிய உத் என்பது தெலுங்கில் இழிந்தோா வழக்கத்தின்கண் வரும பழைய நிகழ்காலவினையாகிய ఆడుతాడు పాడుతాడు என்னும் வினைகளில் காணப்படுகின்றது.

மலயாளத்தில் ஆடுந்நான் டாடுந்நான் எனவும் புதிய கன்னடத்தில் ಆಡುತ್ತಾನೆ, ಪಾಡುತ್ತಾನೆ எனவும் நிகழ்காலத்தில் வரும். இவற்றில் உத் உங் இடைநிலை நிகழ்காலத்தைக் காட்டுகின்றது.

இந்த உத்என்னும் இடைநிலையே உவ் உம் எனப் பிற்காலத்தில் திரிந்து எதிர்காலத்திலும் நிகழ்காலத்திலும வந்தது. இந்த இடைநிலை எதிர்கால நிகழ்காலங்களில் வந்ததென்பதற்கு வேறோா திருஷ்டாந்தம் உண்டு. உடன்பாட்டுவினையின் இடைநிலைமெய்யின் பின் ஆ, அல் விகுதிகளைவைத்து, அந்த மெய்யின்பின் உயிரிருந்தால் அதனை கெடுத்து அதனிடத்தில் ஆ அல் விகுதிகளை வைத்தால், எதிர்மறைவினையுண்டாம் என்பது எதிர்மறை வினைப் பொதுவிதி. அதன்படி செய்யாத என்பது இறந்தகாலத்தில் செய்த எனும் உடன்பாட்டுப் பெயரொச்சத்தின எதிர்மறை. செய்யாத வென்னும் இறந்தகால பெயரொச்சம் எதிர்கால நிகழ்காலத்திலும் வருவதனால் அவ்வெதிர்மறைக்கு மூலமான செய்யுத எனனும் உடன்பாட்டுப் பெயரொச்சம் எதிர்காலத்தையும் நிகழ் காலத்தையுங் காட்டவேண்டும்.

---

* எதிர்காலவில் உதாரிக்கப்பட்டிருக்கின்ற திருவிளையாடற் செய்யுளில்வந்த உய்குநம் என்னும் வினை உய்குவோம் எனப் பொருள் கொண்டது.

51. இவ்விடைநிலை உயிரீற்றுப் பகுதிகளுக்கு முன் வருவழி 'பகுதியீற்றுயிர்க்கும் இடைநிலையின் முதலுயிர்க்கும் இடையில் யகர வகரங்கள் தோன்ற, அந்த யகரவகரங்கள் ககரமாய்த்திரிந்து இடைநிலையோடுசேர, குந் எனவரும்.

ஆ + உங் = ஆ + வ் + உங்
= ஆ + வுங்
= ஆ + குங்

இவ்வாறுவரும் குங் என்பதனோடு விகுதியையுஞ் சேர்த்தால்,

ஆ + குங் + ஆன் = ஆகுங்நான்
போ + குங + ஆள் = போகுங்நாள எனவரும்

இருக்குநன். அறிஞனுண்டிருக்குன னறிகவென்றான் இராமா. பால. விகுதி முதலுயிர் இடைநிலையின் தனிக்குறின் முன்னின்று நகரத்தோடுபுணர நகரம் இரட்டித்தது. இவ்வாறு உங் இடைநிலை நகரம் இரட்டிக்க குங்ந் எனவும், உகரம் இகரமாய்த் திரிய கிந்ந் எனவும் நின்றது.

இந்த கிந்ந் * இடைநிலையே அடியில்வரும் வகுக்கின்னு என்னும் வினையில் வந்தது.

நாடாதமலர் நாடிநாடோறு நாரணன்றன்

வாடாத மலரடிக்கீழ் வைக்கவே வதுக்கின்னு. வை. பிர. வகுக்கின்னு 'வகுக்கின்றேன்'

52. இந்தக்கிந்ந் இடைநிலையின் ஈற்றுநகரம் றகரமாய்த்திரிந்ததனுல் கின்ற் என்னும் இடைநிலை வந்தது. இதுவே உகரத்தை யீற்றில்பெற்று கின்று எனவரும்.

---

* இந்நூலில் இலக்கணவாராய்ச்சியில் தந்நகர றன்னகரங்களுக்கு வேறுபாடில்லை. சாஸ்திரத்தால், னகரம் இருக்கும் இடங்களில் நகரமே யிருக்கவேண்டும். நகரம் னகரமாய் மாறியது வழக்கத்தால். ஆதலால் இலக்கணப்பிரக்கிரியைகளில் நான் னகரத்தை யெடுக்கவில்லை. வழக்கத்தால் எங்கு னகரம்வந்து இருக்கின்றதோ அங்கு நகரத்தை னகரமாய்த் திரித்துக்கொள்க.

**53. பிற்காலத்தில் புலவர்கள் இக்கின்று என்னும் இடைநிலையை துவிதத்தியோடு சேர்ந்த இறந்தகாலவினையெச்சமாகக்கொண்டு பகுபதவுறுப் புக்களைப்பிரிக்க, கில் என்னும் ஓர் புதியபகுதி யுண்டாயிற்று.**

இப் புதியபகுதிக்கு இடைநிலை விகுதிமுதலிய வுறுப்புக்களைச்சேர்க்க பலபுதியவினைகளும் உண்டாயின.

இன்றும் = கில்லு தும், 'கில்லுவோம்'
= கில் + தும், உகரக்கேடு
= கிற் + றும். லகர தகரங்கள் இருறகரங்களாய்த் திரிந்தன.

தெளிந்துணர்ந்துகிற்று மென்ற றேவராலு மாகுமோ. ராமா.

54. கிறு கின்று இடைநிலையின் னகரந்தொக கிறுவந்தது.

55. ஆநின்று } இருத்தலையுணர்த்திய நில், கிட என்னும் பதுதியடியாய்வந்த நின்றன் நின்றன் முதலிய
ஆகிடந்து } வினைகளும் செயவென்னும் அகரவீற்றுத்தொழிற்பெயரோடு சேர்ந்து தொடர்மொழியாய் வந்து நிகழ்காலத்தைக் காட்டும்.

உண்ண + நின்றன்=உண்ணநின்றன் முன்வினையின் ஈற்றகரம் நீண்டது.

உண்ண + கிடந்தான்=உண்ணகிடந்தான்.

உண்ண — நின்றன் உண்ணல் 'உண்ணுதலென்னுந் தொழிலைச்செய்வதற்கு' நின்றன், கிடந்தான் இருந்தான், எனப்பொருள். உண்ணுதலைச் செய்வதற்கு இருந்தானென்பதனுல் அத்தொழிலைத் தொடங்கி முடிக்காது இருக்கின்றனென்று தாற்பரியம். இதுவே புலவர் வழக்கத்தால் அவ்வினைக்குப் பொருளாயிற்று.

தெலுங்கில் ఆడుచున్నాడు (ஆடல் உளன்) என்பது பகுபதப்பொருளால் ஆடுதல் என்னுந்தொழிலையுள்ளவன் என்று பொருள்தந்தாலும், வழக்கத்தில் ஆடுவான் என்னும் பொருளைத் தருகின்றது.

இப்படிக்கு நிகழ்காலத்தில் உத் உந் துந் கிந் கின்று கிறு என்னு மிடைநிலைகள் தமிழில் காலங்காட்டு மிடை நிலைகளாய் வந்தன.

**56. கின்று இடைநிலை பகுதியோடு புணரும்போது ககரம்சில விடத்து இரட்டித்தும் சிலவிடத்து இரட்டிக்காதும் வரும்.**

**57. அகரவீற்றுப் பகுதிக்குமுன் கின்று இடைநிலை * முதன்மெய் இரட்டிக்கும்.**

நடக்கிறான், பறக்கிறான், இழக்கிறான், கலக்கிறான் } இப்படிக்கு

| | | |
|---|---|---|
| அற | கர | புர |
| இக | சுற | மண |
| இர | கிட | மித |
| இற | சிவ | முக |
| உக | துற | வித |
| உற | பற | |

**58. உகரவிற்றுப் பல்லசைப்பகுதிகளுக்கு முன் இடைநிலை மெய் இரட்டிக்காது.**

| | |
|---|---|
| தகுகிறான் | அடங்குகின்றான் |
| நகுகிறான் | தொடங்குகின்றான் |
| நடுகிறான் | விரும்புகிறான் |
| இடுகிறான் | அலம்புகிறான் |
| படுகிறான் | ஆடுகிறான் |
| இறுகிறான் | வேண்டுகின்றான் |

உழுகிறான், அழுகிறாள், தொழுகிறாள், பொருகிறான் }

விலக்கு—எடுக்கிறான், இருக்கிறான், அடுக்கிறான், கொடுக்கிறான், உறுக்கிறான், மறுக்கிறான்

---

கின்று இடைநிலையின் ககரம் என்றது பொதுவாய் இடைநிலையின் (முதன்மெய்) மெய்யென்று சொன்னது, இறந்தகால விடைநிலைத் தகரமும் எதிர்காலவிடை நிலைவகரமும் இவ்விதியைத் தழுவியிருக்கின்றதென்று தெரிவித்தற் பொருட்டே. வகரம் இரட்டித்து வரவேண்டியவிடத்து வகரம் பகரமாய்த் திரிந்து இரட்டிக்கும். ஆதலால் இந்தவிதியால் எதிர்காலத்தில் நடப்பானென்று வகரம் பகரமாய்த் திரிந்து இரட்டித்து வரும். இறந்தகாலத்தில் 55-ம் விதியிலுள்ள விசேஷ விதியால் நடத்தானென வராமல் நடந்தானென வரும். மேல்விதியில் இடைநிலை வல்லினம் என்று பொதுவாய்ச் சொன்னதினால் கின்று இடைநிலையின் ககரம் இரட்டிக்குமிடத் தெல்லா இறந்தகால விடைநிலைத் தகரமும் எதிகால விடைநிலை வகரமும் இரட்டிக்குமென்று பொதுவாய் அறிந்துகொள்ளலாம்.

முன், பின், கீழ், மீது அடியாய்ப்பிறந்த முந்து, பிந்து இழி, மீறு, என்னும் பகுதிகளின் முன் இடைநிலை மெய் இரட்டிக்காது. முந்துகின்றான்; பிந்துகின்றான், இழிகின்றான், மீறுகின்றான்.

59. ஈரசை மெய்யீற்றுப் பகுதிகளின் முன் இடைநிலை மெய்யிரட்டாது. பகுதிக்கும் இடைநிலைக்கும் இடையில் உச்சாரியை விகற்பமாய்வரும்.

| | |
|---|---|
| கவலுகிறான் | கவல்கிறான் |
| உமழுகிறான் | உமழ்கிறான் |
| அருளுகிறான் | அருள்கிறான் |
| புகழுகிறான் | புகழ்கிறான் |

இப்படிக்கு.

| | | | |
|---|---|---|---|
| கனல் | நவில் | அடர் | நிகா |
| கமழ் | திகழ் | அவிர் | நுகா |
| திரள் | இகழ் | பெயர் | |
| உருள் | கவிழ் | புகர் | |
| தவிா | முரண் | பகா | |
| பொருந் | அதிா | தகா | |
| உறிஞ் | தொடர் | நகர் | |

60. மெய்யீற்று ஓரசைப்பகுதிகளின்முன் இடைநிலை வல்லினம் பெரும்பான்மை இரட்டாது.

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| சொல்லுகிறான் | இப்படிக்கு | | | | | |
| வெல்லுகிறான் | ஒல் | எள் | தெள் | கொல் | கள் | விள் |
| கற்கிறான் | புல் | ஞெள் | தொள் | பொள் | | முள் |
| நிற்கிறான் | மெல் | தள் | நள் | உன் | | பின் |
| கேட்கிறான் | உள் | துள் | மொள் | பன் | | மண் |
| | செல் | துன் | வின் | மின் | | |

இப்பகுதிகளில் சிலவற்றிற்கு இடைநிலைக்குப்பின் உகரச்சாரியைவரும். அப்படி வந்த உகரம் பகுதிக்கே அசைநிறை விகுதியாய்விடும். நிற்கிறான் கற்கிறான் கேட்கிறான் என்பவற்றில் கின்று இடைநிலையின் ககரம் இரட்டிக்காவிட்டாலும் இரட்டித்தாற்போல வலிய ஒலியுள்ளது. மற்றவுதாரணங்களில் ககரம் ம X கரத்தைப்போல் ஒலிக்கும்.

அப்படிக்கு உகரம் அசைநிறைவிகுதியாய் வந்தவைகளை உகரவீற்றுப் பகுதிகள் எனவே கொள்ளவேண்டும். இவ்வாறு சொல் என்பது பண்டு மெய்யீராய் வழங்கி சொற்றான், சொற்ற, சொற்று என

விறந்தகாலத்தில், எச்சமுமுற்று மாகிவந்தது. பிற்காலத்தில் உகரத்தை யசைநிறை விகுதியாய்ப் பெறறு உகரவீற்றுப் பகுதியாய் விட்டது. அதனாற் றான், சொல்லினான், சொல்லின, என இன்னிடைநிலைபெற்று முற்றும் எச்சமுமாகி வந்தது. உகரவீற்றுப் பகுதிகளுக்கு இறந்தகாலத்தில் இன்இடைநிலையென்பது இனிமேல்வரும் விதி.

ஆர் (ஒலித்தல்) பார், வேர், வார், காய், வாய், இவற்றிற்குமுன் இடைநிலைமெய் இரட்டிக்கும்.

ஆர்க்கிறான் விலக்கு ஆர்கிறான் (மிகுதல்)
பார்க்கிறான்
வேர்க்கிறான்
வார்க்கிறான்
வாய்க்கிறான்

61. பெயரடியாகப் பிறந்த பகுதிகளின் முன் வல்லினம் இரட்டிக்கும்.

| | |
|---|---|
| சிவக்கின்றது | சிவப்பு |
| தித்திக்கிறது | தித்திப்பு |
| உவர்க்கின்றது | உவர்ப்பு |
| புளிக்கின்றது | புளிப்பு |
| பூக்கிறது | பூ |
| காய்க்கிறது | காய் |

62. வடமொழியடியாய்ப் பிறந்த தற்சம தற்பவப் பகுதிகளுக்கு முன் இடைநிலைமெய் இரட்டிக்கும்.

நயிக்கின்றான்,
அரிக்கின்றான்
க்ஷமிக்கின்றான் தரிக்கின்றான் புசிக்கின்றான்

63. இடைநிலைக்கு முன் உச்சாரியையைப் பெற்றுவரும் வா, தா, அலமா, தெருமா, ஏமா முதலிய ஆகாரவீற்றுப் பகுதிகளுக்கு முன் இடைநிலைமெய் இரட்டாது.

| | |
|---|---|
| வா | வருகிறான் |
| தா | தருகிறான் |
| உட்கா | உட்காருகிறான் |
| அலமா | அலமருகிறான் |
| ஏமா | ஏமாருகிறான் |
| தெருமா | தெருமருகிறான் |

உகரச்சாரியை யைப்பெறுதவைகளுக்கு முன் இடைநிலைமெய் இரட்டும்.

| | |
|---|---|
| கா | காக்கிறான் |
| செம்மா | செம்மாக்கிறான் |
| ஏமா | ஏமாக்கிறான் |
| அண்ணு | அண்ணுக்கிறான் |
| இறுமா | இறுமாக்கிறான் |
| பொச்சா | பொச்சாக்கிறான் |
| அல்லா | அல்லாக்கிறான் |
| சோகா | சோகாக்கிறான் |
| மல்லா | மல்லாக்கிறான் |
| மல்கா | மல்காக்கிறான்—முதுகு கீழாய்க் கிடந்தான். |

64. தன்வினைக்கும் பிறவினைக்கும் பொதுவாய் நிற்கும் பகுதிகளுக்கு முன் இடைநிலை மெய் தன்வினையில் இரட்டிக்காது, பிறவினையில் இரட்டிக்கும்.

| | தன்வினை | பிறவினை |
|---|---|---|
| முடி | முடிகிறான் | முடிக்கிறான் |
| இடி | இடிகிறான் | இடிக்கிறான் |
| சொரி | சொரிகிறான் | சொரிக்கின்றான் |
| தீர் | தீர்கிறான் | தீர்க்கிறான் |

இப்படிக்கு

| | | | |
|---|---|---|---|
| குழி | குறை | வளர் | வீழ் |
| இழி | கரை | முனை | தோய் |
| ஒழி | நுழை | அடை | சாய் |
| ஒடி | குழை | உறை | பாய் |
| முறி | கலை | சேர் | உதிர் |
| எரி | அலை | வளர் | விதிர் |
| விரி | வளை | அடர் | அமர் |
| பிரி | விளை | ஆழ் | தளர் |
| மறை | உடை | தாழ் | |

65. வி-பி ஈற்றுப்பிறவினைப்பகுதிகளுக்குமுன் இடைநிலை வல்லினம் இரட்டிக்கும். துவவீற்றுப்பகுதிகளுக்கு முன் இரட்டிக்காது.

போவிக்கின்றான்—உடைக்கின்றான்
செய்விக்கின்றான்—நடப்பிக்கின்றான்
வாழ்விக்கின்றான்—கற்பிக்கின்றான்

* 15-ம் பக்கத்திலுள்ள மல்காமுதலிய பகுதிகளைக் காண்க.

போவிக்கின்றான்—சேர்ப்பிக்கின்றான்
தெரிவிக்கின்றான்—தோற்பித்தான்
அறிவிக்கின்றான்—காண்பித்தான்
நடத்துகிறான்—துரத்துகிறான்
செலுத்துகிறான்—தாழ்த்துகிறான்
நிறுத்துகிறான்—வாழ்த்துகிறான்

66. வகர வீற்றுப் பிறவினைப் பகுதிகளின் முன் இடைநிலைமெய் யிரட்டிக்காது.

நிறுவுகின்றான்
கடாவுகின்றான்
நடாவுகின்றான்—நடவுகின்றான்.

67. கு டு து று ஈற்றினுடையனவாய் க-ட-த-ற என்னு மெழுத்துக்களை இரட்டித்து வரும் பிறவினைப் பகுதிகள் தவ்விகுதிகளை யீற்றிற் பெற்றுவந்தன வாதலால், அத்தன்மையான பகுதிகளுக்கு முன் இச்சூத்திரத்தின்படி இடைநிலை வல்லினம் இரட்டிக்காது.

| | | |
|---|---|---|
| ஆகு | ஆக்கு | ஆக்குகின்றான |
| போகு | போக்கு | போக்குகின்றான் |
| அடங்கு | அடக்கு | அடக்குகின்றான் |
| ஆடு | ஆட்டு | ஆட்டுகிறான் |
| ஓடு | ஓட்டு | ஓட்டுகின்றான் |
| திருந்து | திருத்து | திருத்துகின்றான் |
| பொருந்து | பொருத்து | பொருத்துகின்றான் |
| ஆறு | ஆற்று | ஆற்றுகிறான் |
| ஏறு | ஏற்று | ஏற்றுகின்றான் |
| மாறு | மாற்று | மாற்றுகின்றான் |
| தேறு | தேற்று | தேற்றுகின்றாள் |
| ஊறு | ஊற்று | ஊற்றுகின்றான் |

68. இழிசினர் வழக்கின்கண் இன்று இடைநிலையில் ககரம் இரட்டிக்காத பகுதிகளுக்குப்பின் இடைநிலையின் ககரமும் பகுதியீற்று உகரமுங் கெட்டுவரும்.

| | | |
|---|---|---|
| ஆடுகிறான் | ஆடுறான் | ஆட்றான் |
| பாடுகிறான் | டாடுறான் | பாட்றான் |
| வாழ்கிறான் | வாழுறான் | வாழ்றான் |
| விடுகிறான் | விடுறான் | விட்றான் |
| தொடுகிறான் | தொடுறான் | தொட்றான் |
| ஆய்கிறான் | ஆய்றான் | |

இவ்வினைகளில் அஃறிணை யொருமையில்,
நிலை முழுவதும் அதுவிகுதியின் அகரமு

| | | | |
|---|---|---|---|
| ஆகிறது | ஆகுது | ஆடுகிறது | திில் வந்த |
| போகிறது | போகுது | பாடுகிறது | |
| வருகிறது | வருது | உருளுகிறது | த்துக்களை |
| உருகிறது | உருகுது | | |

ம்ரக்காயரென்னும் ஜாதியாருடைய பா காலத்தில்
ம்பு இரிக்கிறி வச்சிரம் இரிக்கிறி பவ கப் பெரு
என அதுவிகிதியின் துகரம்கெட அகர டைநிலைத்
த்திரிகின்றது. கெட இடை
திரியும்.

இறந்தகாலம்.

68. இறந்தகாலத்தைக் காட்டும் இடைநிலைகள் த் ட்
னும் எழுத்துக்கள். முதலிடைநிலை த
விடைநிலைகளெல்லாம்அதன்திரிபே. 
ந் இடைநிலையின்பின் இகரச்சாரியை
ல தமிழில் ன் இடைநிலையின் பின் இ ர நகரங்
வரும். மற்கண்ட
ய வுச்சா

ஆடினன் க. ஆடிதனு
பாடினன் பாடிதனு

69. வடமொழியிலும் இவ்வாறே த் இடைநிலை இ
பெற்றும் பெறாதும் வரும்.

| | | |
|---|---|---|
| விதித | தெரிந்த | வித |
| ஹஸித | சிறித்த | ஹஸ |
| ஜ்ஞாத | தெரிந்த | ஜ்ஞா |
| நக்ந | வெட்க மடைந்த ஆடையில்லாத | லஜ்ஜ் |
| வஷ்ட | விளங்கின | வஸ ற்கு இறந் |
| மறைந்த | மறைந்த | மற ன்முன் நக |
| ஸ்மிருத | நினைந்த | ஸ்மிரு |
| வக்த | வெந்த | வப |

தகரமானது ந் ட் வ் ம் ஆய்த்திரியும். தி
தின்பின் இகரச்சாரியை வராது.

70. உகரவீற்றுப் பகுதிகள் இன் இடைநிலைபெறும். னின் அது

| | | | | |
|---|---|---|---|---|
| ஆடினன் | ஆடு | ஓடு | கட்டு | ம் சேறு. |
| பாடினன் | பாடு | நாடு | வெட் | |

## திரவிடசப்த்ததவம்.

போ
தெரி தேறினன் தேறு பாடு மூட்டு துலங்கு
அறிவ கீறினன் கீறு கூடு குத்து கலங்கு
நடத் அஞ்சினன் அஞ்சு வேண்டு பத்து
செலு இப்படிக்கு தேண்டு ஒட்டு
நிறுத் மண்டு சுட்டு
66. வகர வீற்றுப் அண்டு கட்டு
யிர ஆறு அடங்கு
ஏறு மடங்கு
திறவு
கடா னின் னகரம் யகரமாய்த் திரிந்தும் வரும்.
நடா ஆடினன் ஆடியான்
67. குடுதுறு பாடினன் பாடியான்
து தேடினன் தேடியான்
து தொடங்கினன் தொடங்கியான்
அ **அடங்கியான்.**
ர நிலையிற்றிரியாதடங்கியான்றோற்றம்
மலையினுமாணப்பெரிது. குறள்.
ஆகு **இவறியான்** இவறினன் லோபஞ்செய்தவன்
போ செயற்பால்செய்யாதிவறியான்செல்வ
அடங் உயற்பாலதன்றிக்கெடும். குறள்.
ஆடு
ஓடு **ஆயார்** ஆனவர்
திருந் கல்லாக்கழிப்பர்தலை**யாயார்**நல்லவை
பொரு துவ்வாக்கழிப்பரிடைகள். நாலடி.
ஆறு ; போகு என்னும் பகுதிகளுக்குமுன் இன்வரின் விகற்ப
ஏறு மாய் பகுதியீற்றுக் குகரமும் இடைநிலையின் இகர
மாறு முங் கெடும். இல்லாவிட்டால் யிகரமாய்த்திரியும்
தேறு
ஊறு ஆகிறான் ஆனான் ஆயினன்
போகிறான் போனான் போயினன்
68. இழிசினர் வழு இடைநிலை னகரம் யகரமாய்த் திரிய
டி ஆகியான்
பு போகியான் } எனவும் வரும்.
ஆடுகி ஆகினது—ஆயினது, ஆகின்று ஆனது
பாடுகி ஆயின்று ஆயிற்று
வாழ்கி ஆச்சு ஆச்சி உலகவழக்கு
விடுகி ஆச்சிது
தொடு போகினது போகின்று
ஆய்கி போயின்று
போயிற்று

| | | |
|---|---|---|
| | போனது | |
| பொச்சி | போச்சு | உலகவழக்கு |
| | போச்சிது | |

ஆனது போனது * எனபவை பிற்காலத்தில் வந்த சிதைவென அறியவேண்டும்.

73. தனிக்குறலின் முன்னின்ற க், ச், ட், ற், இவ்வெழுத்துக்களை யூர்ந்த உகரமீற்றி னுள்ளவைகளும் நிகழ்காலத்தில் கின்று இடைநிலையின் ககரம் இரட்டிக்கப் பெரு தவைகளுமாகிய பகுதிகளுக்குமுன் இடைநிலைத் தகரம் வந்தால் பகுதியீற்று உகரங்கெட இடைநிலைத் தகரம் பின்னின்ற மெய்யாய்த் திரியும்.

நக்கான் = நகு + த் + ஆன்
நக் + க் + ஆன்
அட்டான் = அடு + த் + ஆன்
அட் + ட் + ஆன்

நகு அடு என்பவற்றில் ககர டகரங்கள் Xகர ḍகரங்களாய் ஒலிக்கும். இறந்தகாறத்தில் மேற்கண்ட விதியின்படி இரட்டிக்கும்பொழுது வலிய வுச்சாரணையைப் பெறும்.

பெற்றான் = பெறு + த் + ஆன்
பெற் + ற் + ஆன்

| | | |
|---|---|---|
| புகு | தொடு | உறு |
| மிகு | படு | அறு |
| தகு | கெடு | இறு |
| தொகு | சுடு | பெறு |
| உகு | இடு | செறு |
| | விடு | |
| | நடு | |

இவற்றில் புகு, மிகு, தகு, உகு என்பவற்றிற்கு இறந்தகாலத்தில் தகரந்திரியாமல் தகரத்தின்முன் நகரந் தோன்றும்.

| | | |
|---|---|---|
| புகு, | புகுந்தான் | புக்கான் |
| மிகு, | மிகுந்தான் | மிக்கான் |
| தகு, | தகுந்தான் | தக்கான் |
| உகு, | உகுந்தான் | உக்கான் |

* போனது என னகரவுயிர் மெய்ப்பின்வருவதோவெனின் அது சான்றோர்செய்யுளில் வராமையின் அது சிதைவு எனப்படும் சேனு. தொல். வி. 214.

மேற்சொன்ன பகுதிகளுக்கு முன் கின்று இடை யின் ககரம் இரட்டித்தால், இறந்தகாலத்தி இடைநிலையும் திரியாமல் இரட்டிக்கும்.

| | |
|---|---|
| தொடுக்கிறுன் | தொடுத்தான் |
| விடுக்கிறுன் | விடுத்தான் |
| படுக்கிறுன் | படுத்தான் |
| கெடுக்கிறுன் | கெடுத்தான் |
| உகுக்கிறுன் | உகுத்தான் |

74. அழு - உழு - தொழு-பொரு என்னும் பகுதிகள் தகர இடைநிலையை மாத்திரம் பெறும்.

| | |
|---|---|
| அழுதான் | அழு |
| உழுதான் | உழு |
| தொழுதான் | தொழு |
| பொருதான் | பொரு சண்டைசெய்தல் |

75. லகரவீற்றுப் பகுதிகளுக்கு முன் த் இடைநிலை வந்தால் லகரம் னகரமாயும் தகரம் றகரமாயும் திரியும்.

ஏன்றேம் = ஏல் + த் + ஓம்
ஏன்றேமிது வாயின் மெய்ம்மையே-நள.
ஏற்ற = ஏல் + த் + அ
ஆற்றலுடையார்க்கு மாகாதளவின்றி
யேற்றகருமஞ் செயல்
சொற்றது = சொல் + த் + அது
சொற்றது கோட்டைந் தவிர்த்த தூயவர் கருணை பொங்க
மற்றணந்தோண்மன்னு மறிதலும் யாமுற்றிடுவோம்
அரிச்சந்தி-வெண்.
சொற்ற = சொல் + த் +
சோதியினை யுற்றநங்கன் வாளியுடல் குளிப்பக் காம
மெனச் சொற்றகடல்வாய் விழுந்தான் சோர்ந்து.
அரிச்சந்திர-வெண்.

| | | |
|---|---|---|
| கின்றுன் | கில் | இப்படிக்கு |
| சென்றுன் | செல் | மெல் தொங்குதல் |
| வென்றுன் | வெல் | ஞால் |
| மென்றுன் | மெல் | சால் |
| இகன்றுன் | இகல் | போல் |
| அகன்றுன் | அகல் | ஆல் ஒலித்தல் |

| | | | |
|---|---|---|---|
| | | சால் | 'கொட்பளித்தல் |
| | | கோல் | 'சூழ்ந்திடல்' |
| | | சூல் | தோன்டுதல் |
| | | நால் | 'தாழ்தல்' |
| | | நவில் | கனல் |
| | | இகல் | அரல் |
| | | அகல் | புகல் |
| | | உழல் | சுழல் |
| | | | முயல் |
| விலக்கு | ஒல்லினன் | ஒல் | 'இணங்கு' |
| | புல்லினன் | புல் | |
| | சொல்லினன் | சொல் | |
| | சொன்னன் | | |
| | விற்றன் | வில் | |
| | கற்றன் | கல் | |
| | நூற்றன் | நூல் | |
| | தோற்றன் | தோல் | |
| | நோற்றன் | நோல் | |

76. ளகரவீற்றுப் பகுதிக்கு முன் தகரம்வர ளகர தகரங்கள் இரு டகரங்களாய்த் திரியும். அல்லது ளகரம் ணகர மாயும் தகரம் டகரமாயுந் திரியும்.

| | | | |
|---|---|---|---|
| நட்டான் | நள் | பெட்டான் | பெள் |
| கட்டான் | கள் | தட்டான் | தள் |
| பிட்டான் | பிள் | | |
| கேட்டான் | | கேள் | |
| தோட்டான் | | தோள் | |
| வேட்டான் | | வேள் | |
| இப்படிக்குமூள் | | கிள்மூள் | |

கோட்டுப்பூப்போல மலர்ந்து பிற்கூம்பாது
வேட்டதேவேட்டதாநட்பாட்சிதோட்ட
கயப்பூப்போலமலர்ந்தபிற் கூம்புவாரை
நயப்பாரு நட்பாருமில். நாலடி.

| | |
|---|---|
| கொண்டான் | கொள் |
| ஞெண்டான் | ஞெள் |
| மொண்டான் | மொள் |
| விண்டான் | விள் |
| ஆண்டான் | ஆள் |

| | |
|---|---|
| மீண்டான் | மீள் |
| நீண்டாள் | நீள் |
| மாண்டான் | மாள் |
| மருண்டான் | மருள் |
| சுருண்டான் | சுருள் |
| தெருண்டான் | தெருள் |

இப்படிக்கு புரள், உருள், வறள், திரள், உகள், வெருள் முதலியவை.

| | |
|---|---|
| பொள்ளினன் | பொள்ளு |
| தெள்ளினன் | தெள்ளு |
| அள்ளினன் | அள்ளு |
| இள்ளினன் | இள்ளு |
| துள்ளினன் | துள்ளு |

இவை உகரவீற்றுப் பகுதிகளாய் 70-ம் விதியின்படி இறந்தகாலத்தில் இன் இடைநிலை பெற்றன.

77. அகரவீற்றுப் பகுதிகளின் முன் தகர இடைநிலைவரின் நகரந் தோன்றும்.

திறந்தான்=திற+த்+ஆன்=திற+ந்+த்+ஆன்.
பிறந்தான்=பிற+த்+ஆன்=பிற+ந்+த்+ஆன்.

| | | | |
|---|---|---|---|
| முக | அள | இழ | இள் |
| பிற | துற | உக | இற |
| கற | கர | பய | நய |
| மற | திட | சிவ | அள |
| உவ | உக | பிள | இழ |
| கட | பற | முக | இக |

78. வுகரவீற்றுப் பகுதிகளின் முன் இன் இடைநிலைவரின் எழுத்து நிகர்த்தல் என்னும் விதியால் இடைநிலை யிகரத்தைப்பற்றி வகரமும் அதற்கு முன்னின்ற உகரமும் யகர இகரங்களாய்த் திரிய யகரங்கெடும். கெடநின்ற ஈரிகரங்களும் ஓரளபெடையாய்த் திரியும்.

தழுவு = தழுவினன்
= தழ்+இயினன்
= தழ்இ+இனன்
= தழீ இனன்.

வகரம் யகரமாயும் அதற்கு முன்னின்ற உகரம் இகரமாயும் திரிய, யகரங்கெட, நின்ற இரண்டு இகரங்களும் ஓரளபெடையாய் வந்தன.

| | | | |
|---|---|---|---|
| கழுவு | கழுவினான் | கழீஇனான் | |
| வழுவு | வழுவினான் | வழீஇனான் | |
| நழுவு | நழுவினான் | நழீஇனான் | நிறுத்து |
| நிறுவு | நிறுவினான் | நிறீஇனான் — | நிறுவு |
| வெருவு | வெருவினான் | வெரீஇனான் | ஒ-நிலவு. |
| கொளுவு | கொளுவினான் | கொளீஇனான் | |
| செழுவு | செழுவினான் | செழீஇனான் | |

79. மேற்சொன்ன விகாரம் துவ்வீற்றுப் பிறவினைப் பகுதிகளிற் சிலவற்றிற்கும் வரும்.

| | | |
|---|---|---|
| கொளுத்து | கொளுத்தினான் | கொளீஇனான் |
| இருத்து | இருத்தினான் | இரீஇனான் |
| உடுத்து | உடுத்தின் | உடீஇனான் |
| படுத்து | படுத்தினான் | படீஇனான் |

இவ்வினைகளுக்கும் வுவ்விகுதியீற்றுப் பகுதிகளாய்ப் பிறந்த கொளுவினான், இருவினான், உடுவினான்; படுவினான் என்பவை முதனிலையாக வேண்டும்.

80. வழக்கின்கண் இ ஐ ஈற்றினுள்ள பகுதிகளுக்குமுன் தகரம் சகரமாய்த் திரியும். (எழுத்து நிகர்த்தல்) தகரத்தின்பின் நகரந்தோன்றினால் நகரம் ஞகரமாய்த் திரியும்.

| | | |
|---|---|---|
| அடித்தான் | அடிச்சான் | |
| பிடித்தான் | பிடிச்சான் | |
| வளைத்தான் | வளைச்சான் | |
| படைத்தான் | படைச்சான் | |
| இடிந்தது | இடிஞ்சது | |
| ஒடிந்தது | ஒடிஞ்சது | தகரம் சகரமாய்த் திரிய அதன் பின் தோன்றிய மெல்லினம் (ந) ஞகர மாய்த் திரிந்தது. |
| கழிந்தது | கழிஞ்சது | |
| வளைந்தான் | வளைஞ்சான் | |
| உடைந்தது | உடைஞ்சது. | |

இவ்வினைகளில் பகுதியீற்றுயிர் தாலவியம். அதுமுன் வரும் தந்தியமாகிய தகரவிடைநிலையையும் அதனைச்சேர்ந்த தந்தியமாகிய நகரத்தையும் சகர ஞகரங்களாய் மாற்றுகின்றது.

எதிர்காலவிடைநிலை.

81. எதிர்கால விடைநிலை த-ந-வ-ம-ட-ற இவ்வெழுத்துக்கள் உச்சாரியைப்பெற்றுவரும்: தகரம் முதனிலை. மற்ற வெழுத்துக்கள் அதன் திரிபு.

82. உந் செய்யுத வருத என்னும் பெயரொச்சங்கள் செய்யுளிலும் வழக்கத்திலுமில்லாவிட்டாலும், செய்யாத வாராத என்னும் எதிர்மறை எதிர்காலப் பெயரொச்சம் உண்டாதற்கு முதனிலையாயிருத்தலின் பழையகாலத்தில் இருந்திருக்கவேண்டும்.

அறிதி, 'அறிவாய்' 'அறிகின்றாய்' செய்தி 'செய்வாய்' 'செய்கின்றாய்' போதி 'போவாய் 'போகின்றாய்' தருதி 'தருவாய்' 'தருகின்றாய்' என அறிதி முதலிய வினைகள்நிகழ் காலத்தையும் எதிர்காலத்தையும்காட்டும். அவைகளிலடங்கிய முந்துறுபபாகியஅறித, செய்யுத, போத, தருதஎன்னும் பெயரொச்சங்கள் எதிர்காலத்தையும் நிகழ்காலத்தைக் காட்டவேண்டும்.

ஆகுந போகுந வருந உழுநன் அறிஞன் அறியுநன். இவ்வினைகள் முறையே ஆகும், போகுப, வருப, உழுபவன் அறிபவன் என்றுபொருள் தந்து எதிர்காலந் தழுவிய செயலைக்காட்டுவதனால் அவற்றிலுள்ள நகஞகரங்கள் எதிர்காலத்தைக் காட்டல்வேண்டும்.

**உய்துநம்** உய்யுநம், 'உய்வோம்'. கு சாரியை உந் எதிர்கால இடைநிலை.

வையுடைவாளராகி மார்புறப்பின்னி யாத்த,

கையினராகி யன்னையென்று தங்கருணை நோக்கம்,

செய்யுமென்றிமையார் நோக்கி நோக்குமேற் செங்கைகூப்பி,

**உய்துநமெ**னவாய்பொத்தி யுழையர்தம் பணிகேட்டுய்ய.

திருவிளை - தடாதகையார் திருவவதாரப்படலம்.

**தகைக்குநர்** தகைடப்பவர்

சென்றீபெருமநிற்றகைக்குநர்யாரே.

83. உவ். வருவான் வருவாள் வருவார்

| | | | |
|---|---|---|---|
| வருவான் | வருவாள் | வருவார் | |
| வருவது | வருவ | | |
| வருபவை | வருவ | | |
| வருவேன் | வருவோம் | வருவாய் | வருவீர் |

84. வகரமானது பகுதியீற்று ணனக்களோடுபுணர, பகரமாய்த் திரியும்.

**உண்பான் = உண்ணுவான்,** உண்

காண்பான் = காணுவான், காண்

என்டான் = என்னுவான், என்
தின்பான் = தின்னுவான், தின்
உவ்விடைநிலையின் உகரங்கெட வகரமானது ணகர னகரங்களுக்கு முன் பகரமாய்த் திரிந்தது.

85. உண்ப - காண்ப - என்ப - தின்ப.

உண்பது என்பது துவ்விகுதி கெடுதலாலும் உண்ப வை என்பது வகர ஐகாரங்கள் கெடுதலாலும் உண் பார் என்பது ஈற்று ரகரவொற்று கெடுதலாலும் உண்ப என்று மாறும்.

காண்பது
காண்பவை } காண்ப
காண்பார்

என்பது
என்பவை } என்ப
என்பார்

தின்பது
தின்பவை } தின்ப
தின்பார்

என்ணென்பவேனை யெழுத்தென்ப விவ்விரண்டும்
கண்ணென்பவாழு முயிர்க்கு

என்ணென்ப - 'எண்ணென்பப் படுவதும்,' எழுத்தெ ன்ப - எழுத்தென்பப் படுவதும்,' இவ்விரண்டும் கண்ணென்ப - 'புலவர்கள் கண்ணென்று சொல்லு வர்.'

86. அவன் விகுதிக்குப்பின் உவ்விடை நிலையின் வகரம் பகரமாய்த்திரியும் (எழுத்து வேறுபடுத்தல் என்னும் விதி யின்படி). * அவன் விகுதி ஆன் எனத்திரிந்தால் பக ரமானது முன்னின்ற வகரமாய்த் திரியும்.

| | | |
|---|---|---|
| வருவவன் | வருபவன் | வருவான் |
| தருவவன் | தருபவன | தருவான் |
| செய்வவன் | செய்பவன் | செய்வான் |
| ஆவவன் | ஆபவன் | ஆவான் |
| போவான் | போபவன் | போவான் |
| ஆள்வவன் | ஆள்பவன் | ஆவான் |

உவ்விடை நிலையின் உகரங்கெட்டது. நடுவில் வந்த உதாரணங்களில் வகரம் பகரமாய் மாறினது.

---

* ஒரேமெய் தொடர்ந்து இருதட்வை ஓர்பத்தில் வந்தால் அவ ற்றில் ஒன்று வேறு எழுத்தாய் மாறும்

டையில்வந்த உதாரணங்களில், அவன் விகுதி ஆன் எனத்திரிந்ததனால், இடைநிலை வகரம் பகரமாயத் திரிவதற்குக் காரணமில்லை.

| | |
|---|---|
| என்பவன் | என்பான் |
| தின்பவன் | தின்பான் |
| காண்பவன் | காண்பான் |

இவ்வுதாரணங்களில் உவ்விடை நிலையின் வகரமானது பகுதியீற்று னகர ணகரங்களோடு புணர்ந்து பகர மாய்த் திரிந்தது. ஆகையினால் அவன் ஆன் விகுதி சேரும்பொழுது பகரம் திரியாது.

வருவவன் என்பதில் அவன் விகுதி, வருவ என்பத னோடு சேர்ந்ததனால் வருவவன் என ஒரு சொல லில் இரண்டு வகரங்கள் வந்தன. அதை நீங்கும் பொருட்டு இடைநிலையின் வகரம் பகாமாய்த் திரி ந்தது. அவன் விகுதி, ஆன் எனத் திரிந்த வருவான் என்பதில் இரண்டு வகரம் வருவதற்கு இடமில்லை. காரண நீங்கினதினால் காரியம் நீங்கினது. என்ப வன் என்னும் வினையில் வகரம் பகரமாய்த் திரிவ தற்கு னகரத்தோடு அது புணர்ந்ததே காரணம். அந்தக்காரண மிருக்கு மளவும் பகரம் நிலைத்திருக் கும். அவன் விகுதி ஆன் எனத்திரிவதினால் பகரத் திற்கு யாதொரு பயனுமில்லை. பகரத்தின் காரணம் நீங்கும்பொழுதே பகரம் நீங்கும்.

காண்பான் = காணுவான். காணுவான் என்னும் வினை யில் உவ்விகுதி கெட்டதினால் வகரம் ணகரத்தோ டு புணர்ந்தது

அப்புணர்ச்சியினாலே வகரம் பகரமாய்த் திரிந்தது. கெட்டுப்போன உகரந்திரும்பிவந்தால் பகர நின்ற இடத்தில் முன்னிருந்த வகரம் திரும்பிவரும். பகர த்தின் காரணம்நீங்க பகரமும் நீங்கும்.

ஆகையால், காண்பான் காண்பவன் என்பவைகளில் சந்தியால் வந்த பகரம் விகுதிபேதத்தினால் மா றாது.

ஆடுவன் ஆடுவான் என்பவைகளில், அவன் விகுதியைப் பற்றி வந்த பகரம், ஆன் விகுதி வந்தால் வகரமாய த்திரிந்து விடும்.

87. நிகழ்கால இடைநிலை உயிரீற்றுப் பகுதிக்குமுன் வரும் பொழுது யகரவகர விடைநிலைகள் தோன்ற அந்த யகர வகரங்கள் ககரங்களாய்த்திரிந்து உந் இடைநிலை யோடு சேர்ந்து குந் என ஆனதுபோல, எதிர்கால விடைநிலையாகிய உவ் என்பது உயிரீற்றுப் பகுதிக ளுக்கு முன்னேவந்து அதற்குப் பின் தோன்றிய யகரவகரங்களுக்கு பதிலாய் வந்த ககரத்தோடு சேர்ந்து குவ் என்றுகின்றது

ஆ + உவ் + அது = ஆவுவது = ஆகுவது
போ + உவ் + அது = போவுவது = போகுவது
அறி + உவ் + அது = அறியுவது = அறிகுவது
மொழி + உவ் + அது = மொழியுவது = மொழிகுவது

88. இவ்வாறு வந்த க் என்பதை உகரஞ்சேர்த்து குச்சாரியை என் பார் இலக்கணநூலோர். எப்பகுதிகளுக்கு முன் னின்று இடைநிலையின் ககரம் இரட்டுமோ அப்பகு திகளுக்குமுன் உவ் வந்தால் மேற்சொன்ன படிக் ககரம் தோன்றி யிரட்டிக்கும். உவ்விடைநிலையின் உகரமும் இரட்டித்த ககரமும் கெட்டால் வகரம் பகரமாய்த் திரிந்து இரட்டிக்கும்.

| | |
|---|---|
| நடக்குவது | நடப்பது |
| கிடக்குவது | கிடப்பது |
| இடிக்குவது | இடிப்பது |
| இருக்குவது | இருப்பது |

வி—கடக்குவது கடவது என்பதில் உகரங்கெட்டா லும் வகரம் பகரமாய்த் திரியவில்லை.

89. உவ்விடை நிலையின் உகரமும் அதற்குமுன்னிறகும் ககர வகர யகரங்களும் விகற்பமாய்க்கெடும்.

| | | |
|---|---|---|
| மொழியும் | மொழிம் | உவ்விடை நிலையின் உக ரங்கெட்டது மொழியுவான், மொழியுவாள், மொழி யுவது, மெழியுவ இவற்றி ன் ஈற்று விகுதிகள் கெட உவ் இடைநிலை வகரம் மக ரமாய்த் திரிந்தது. |
| கலும் | கலும் | |
| சென்ம் | செல்லும் | |
| பொன்ம் | போலும் | |
| அருண்ம் | அருளும் | |
| ஆம் | ஆகும் | உவ்விடை நிலையின் உக ரமும் அதற்குமுன்தோன் றின் ககரமும் கெட்டன. |
| போம் | போகும் | |
| வேம் | வேகும் | |
| வாம் | வாவும் | உவ்விடைநிலையின் உகா மும் அதற்கும் முன் தோ ன்றினவகரமும்கெட்டன. |
| தாம் | தாவும் | |
| கூம் | கூவும் | |

கலுழ்மே கலுழுமே ஏ ஏகாரம் அசை
சாரகாடவென் றொழியுங் கலுழ்மே.
மருண்ம் மருளும்
மருளிறுமெல்லா மருண்ம்
போன்ம் போலும்
இவற்றில் உவ் இடைநிலையின் உகரங்கெட்டது.
திசையறி மீகாமனே போன்ம்

90. உவ்விடைநிலை முழுதும் கெடுவதுமுண்டு.

ஆடுவாம் = ஆடாம் உவ்விடைநிலையின் உகரமும் வகரமும் கெட்டன.

பொன்னூசலாடா மோதொழி. நன்னூல் 329.

கொண்மார் = கொள்ளுவ் + ஆர்
= கொண் + ம் + ஆர் ; உகரங்கெட்டது
= கொண்மார்

நடமார் = நடக்குவ் + ஆர்
= நடம் + ஆர்; குகரங்கெட்டது
= நடமார்

சென்மார் = செல்லுவ் + ஆர்
= சென்ம் + ஆர்; உகரங்கெட்டது
= சென்மார்

*என்மர் = என்னுவ் + ஆர்
= என்ம் + ஆர்; உகரங்கெட்டது
= என்மர். ஆகாரங்குறுகியது.

தேவனே மகனலன்செல்வன் மற்றென்மரும்
பாவையே நோற்றனள் பாரின் மேலென்மரும்
கோவனும் மக்களுங்குளிர்ந்து தோணேக்கினர்
ஓவென வையகத் தோசைபோ யுயர்ந்ததே
சிந்தா - கனகமா - 287.

என்மனார் † = என்னுவ + அனார். அனார் அனையவர் என்னும் சர்வநாமத்தின் சிதைவு விகுதியாய் வந்தது.
= என்மனார்

---

* என்மாரென் மருமெனத் திரிந்தது. உண்மருத்தின் மருமென் றாற்போல. நச்சினார்.

† என்மனா ரென்பது செய்யுண் முடிபெய்தின்ற தோராரீற்று எதிர்கால முற்றுச்சொல் என்றிசினோர். கண்டிசினோர் என்பனமுதலாயின. அவ்வாறு வந்த இறந்தகாலமுற்றுச் சொல் என்ப என்னு

மொழிமனார் = மொழியுவ் + அனார்
= மொழிம் + அனார் உகரங்கெட்டது.
= மொழிமனார்

செய்ம்மன = செய்யுவ் + அன-என்பது அனையஎன்னுஞ் சர்வநாமத்தின் சிதைவு. விகுதியாய் வந்தது.
= செய்ம் + அன. உகரங்கெட்டது
= செய்ம்மன. மகரமிரட்டித்தது.

உணருமோர் = உணருவ் + ஓர்-ஓர்-பலர்பால் விகுதி அவர் விகுதியின் திரிபு.
= உணரும் + ஓர்
= உணருமோர்.

[9]1. உவ்விடை நிலையின் வகரம் தன்மை முன்னிலையில் தகரமாய் வரும்.

வருவி வருதி வருவாய்
வருவிர வருதிர
வருவேன் வருது என் விகுதி உ எனக்குறுகியது
வருவோம் வருதும் ஓம் விகுதி உம் எனத் திரிந்தது

காத்தும் காப்போம்
இவற்றைக்கடிது காத்தும் என்று காவலாளர் ஏமஞ்சூழ்ந்து விளக்கினோடு திரிதருவாரன்றே. உரை. இறை.

உய்தும் உய்வோம்
உய்துமெனா விரைவினொடினன் மலைமுழை. கட் கி.

92. லகர ளகர வீற்றுப்பகுதிக்குமுன் இத்தகரம் றகரமாயும் டகரமாயும் திரியும்.

செலலுதி = செல் + தி. உகரக்கேடு
= செற் + றி. லகர தகரங்கள் இரண்டு றகரங்களாய்த் திரிந்தன.

---

முற்றுச் சொல்லினது பகரங்குறைந்தது. மன்னு மாருமென இரண்டிடைச் சொற்பெய்து விரித்தாரென்று உரையாசிரியர் கூறினாராலெனின்;—என்மனாரென்பது இடர்ப்பட்டுழிச் சிறுபான்மை வாராது நூலுள்ளுஞ் சான்றோர் செய்யுளுள்ளும் பயின்று வருதலாலும் இசைநிறையென்பது மறுத்துக்கூறினர். பின்னுமிசை நிறையென்றல மேற்கோண் மலைவாதலாலும் அவர்க்கது கருத்தன்றென்க.—சேனா. தொல்.

= செ + றி முன்னின்ற றகரங்கெட்டது
= சேறிகெட்ட றகரத்தின் பின்னின்ற
உயிர் நீண்டது.

செல்லுதிர் = செல் + திர்
= செற் + றிர்
= செ + றிர்
= சேறிர்

'என்மனா ரென்பது செய்யுண்முடிபாயதோ ராரீற்று முற்றுச்சொல் மன் எதிர்கால விடைநிலை. அது உயர்திணை யென்மனார் மக்கட்சுட்டே, என்னுஞ் சூத்திரத்துச் சேனாவரைய ருரையாலுமறிக" சிவஞானமுனிவர்.

செல்லுது = செல் + து
= செற் + று
= சே + று = சேறு

செல்லுதும் = செல். தும்
= செற் + றும்
= சே + றும் = சேறும்

இப்படிக்கு

வெல்லுதி = வேறி
வெல்லுதிர் = வேறீர்
வெல்லுது = வேறு
வெல்லுதும் = வேறும்
கொல்லுதி = கோறி
கொல்லுதிர் = கோறீர்
கொல்லுது = கோறு
கொல்லுதும் = கோறும்
நில்லுதி = நிற்றி
நில்லுதிர் = நிற்றிர்
நில்லுது = நிற்று
நில்லுதும் = நிற்றும்
வில்லுதி = விற்றி
வில்லுதிர் = விற்றிர்
வில்லுது = விற்று
வில்லுதும் = விற்றும்
காணுதி = காண்டி
காணுதிர் = காண்டீர்
காணுது = கண்டு
காணுதும் = காண்டும்

கலிக்கிறையாய நெஞ்சிற் கூட்டியங்காரனம் மேல
வலித்து காண்டு மென்று வாளை யிறிலங்க நக்கான்.
சிந்தா - காம - 237.

93. இவ்வெதிர்கால வினைகளுக்கும் அவற்றின் பகுதிகளடியாய்ப் பிறந்த இறந்தகால வினைகளுக்கு முள்ளவேறுபாடு அடியில் விவரித்தவாறு வரும்.

94. லகாரவீற்றுப் பகுதி யடியாய் வந்த வினைகளின் ஈற்று லகரம் இறந்தகாலவிடைநிலைத் தகரத்தின்பின் னகரமாய்த் திரியும். எதிர்காலவிடைநிலைத் தகரத் தகரத்தின் பின் றகரமாய்த்திரியும்.

| | எதிர்கா | இறந்தகா |
|---|---|---|
| செல் மு | சேறி | சென்றி |
| | சென்றீபெரும நிற்றகைக்குநர்யாரே. சென்றீ = செல் ஏவலில்சேறீ என்றிருக்கவேண்டியது. சென்றீ எனவந்தது வழூவு. | |
| | சேறிர் | சென்றிர் |
| த. | சேறு | சென்று |
| | சேறும் | சென்றும் |
| வெல மு | வேறி | வென்றி |
| | வேறிர் | வென்றிர் |
| த. | வேறு | வென்று |
| | வேறும் | வென்றும் |
| கொலி. மு | கோறி | கொன்றி |
| | கோறிர் | கொன்றிர் |
| த. | கோறு | கொன்று |
| | கோறும் | கொன்றும் |
| வி. மு. | நிற்றி | நின்றி |
| | நிற்றிர் | நின்றீர் |
| த. | நிற்று | நின்று |
| | நிற்றும் | நின்றும் |
| | நிற்றி | நில்லுதி |

இற்றையும்பிறர்க்கும் மிகவேறென்ன
நிற்றிபோலுங்கிடந்த நிலத்தரோ.
கட்டி வாலி. 87.

95. ளகரவீற்றுப்பகுதியடியாகப்பிறந்த வினைகளின் ஈற்று ளகரம் இறந்தகாலத்தில் ணகரமாய்த்திரியும். எதிர்காலத்தில் டகரமாய்த்திரியும்.

| | | |
|---|---|---|
| மீள் மு. | மீடி | மீண்டி |
| | மீடிர் | மீண்டிர் |

த. { மீடு    மீண்டு
 { மீடும்    மீண்டும்
மீடும்    நாம் மீளுதும்

மீடி யெங்ககறி யென்பது விளம்பவ்வரும் அரணி
1 - வீ
மின்னிடைச்சனகியை மீட்டு மீடுமால்.

| | | |
|---|---|---|
| ஆள் | ஆடி * | ஆண்டி |
| மு | ஆடிர் * | ஆண்டிர் |
| த | ஆடு | ஆண்டு |
| | ஆடும் | ஆண்டும் |
| மாள் | மாடி | மாண்டி |
| மு | மாடிர் | மாண்டிர் |
| த | மாடு | மாண்டு |
| | மாடும் | மாண்டும் |
| கிள் | கிடி | கிண்டி |
| மு | கிடிர் | கிண்டிர் |
| த | கிடு | கிண்டு |
| | கிடும் | கிண்டும் |
| நீள் | நீடி | நீண்டி |
| மு | நீடிர் | நீண்டிர் |
| த | நீடு | நீண்டு |
| | நீடும் | நீண்டும் |

96. அடியில்வரும் பகுதிக , ளாய்ப்பிறந்த வினைகள் எதிர்காலத்திலும் இறந்தகாலத்திலும் வேறுபாடில்லாமலிருக்கின்றன.

| | எதிர். | இறந். |
|---|---|---|
| கேள். | கேட்டி | கேட்டி |
| | கேட்டிர் | கேட்டிர் |
| | கேட்டு | கேட்டு |
| | கேட்டும் | கேட்டும் |
| தோள். | தோட்டி | தோட்டி |
| | தோட்டிர் | தோட்டிர் |
| | தோட்டு | தோட்டு |
| | தோட்டும் | தோட்டும் |
| வேள். | வேட்டி | வேட்டி |
| | வேட்டிர் | வேட்டிர் |
| | வேட்டு | வேட்டு |
| | வேட்டும் | வேட்டும் |

இந்தவினைகள் இலக்கணவிதியால் உண்டாகும். புலவர்கள் பிரயோகங்களை பழைய நூல்களில் பார்க்கவேண்டும்.